

வண்ணப்படம் : யோகா

# பெருகும்

மல்ட்டிபிள் ஸ்க்ளரோசிஸ் (சுருக்கமாக, எம்.எஸ்) புதுசாக வந்திருக்கிற ஒருவித பயங்கர நோய்!

சமீபத்தில் சென்னையில், இந்த நோயினால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவுவதற்கான ஓர் அமைப்புக்குச் சென்றிருந்தபோது, தில்லி, பம்பாய், அகமதாபாத், நாசிக், கல்கத்தா, புனே என்று பல நகரங்களில் இந்த அமைப்பை ஏற்படுத்திவிட்டுத்தான் சென்னைக்கு வந்திருப்பதாகச் சொன்னார்கள்.

அப்படி என்ன பயங்கரமான நோய்? ஊர் ஊராகப் போய் ஏதோ பிராஞ்சுகள் திறப்பது மாதிரி, நோயாளிகளுக்கு உதவக் கிளைகள் திறந்து வைக்க வேண்டிய அவசியம் என்ன?

முதலில், அமைச்சர் தமிழ்க்குடிமகன் கோபித்துக் கொள்ளாமல் இருக்க, இந்த நோயின் தமிழ்ப் பெயரைச் சொல்லி விடுவது நல்லது: பன்மைத் தழும்புகள். இன்னும் கொஞ்சம் நீட்டி முழக்கி, மத்திய நரம்பு பன்மைத் தழும்புகள் நோய் என்றும் சொல்லலாம்.



சென்னை அமைப்பின் செயலர் தேவி பாலா விடம் (கொஞ்சம் நடுங்கிக் கொண்டே) இந்த நோய் பற்றிய நம் கேள்விகளைக் கேட்டோம்:

**"ஸ்பாஸ்டிக் சொஸைடி, ஹெட்ஏக் சொஸைடி மாதிரி ஒவ்வொரு நகரத்திலும் தனி 'சேப்டர்' தொடங்கக் கூடிய அளவுக்கா எம்.எஸ். நோயாளிகள் இருக்கிறார்கள்?"**

"சென்னையில் மட்டுமே இப்போதைக்குச் சுமார் நூறு நோயாளிகள் போல 'எம்.எஸ்.' ஸால் பாதிக்கப்பட்டிருக்கிறதாகத் தெரிந்து கொண்டோம். கோவை, சேலம், மதுரை ஆகிய நகரங்களிலும் இந்த நோயாளிகள் இருப்பதாகத் தெரிகிறது.

"வாழ்க்கையில் இனிமையான பருவம் என்று கருதப்படுகிற 20 வயது முதல் 40 வயது வரையிலான பருவத்தில்தான் இது வரும். நமது கனவுகளை, கற்பனைகளை, சாதனைகளாக மாற்றத் துடிக்கிற இந்தக் கால கட்டத்தைத்தான் இந்த நோய் தேர்ந்தெடுக்கிறது!"

(இந்த நோய்க்குக் குறைந்த பட்சம் ஒரே ஒரு காது இருந்து விட்டால் கூடப் போதும், ஆத்திரம் தீர ஒரு முறுக்கு முறுக்கி விட ஆசை!)

தேவி பாலா தொடர்ந்தார்:

"நமது உடலில், மத்திய நரம்பு மண்டலம் மிக முக்கியமானது. மூளையும் முதுகுத் தண்டு வடமும் இந்த மண்டலத்தின் இன்றியமையாத உறுப்புகள். இவற்றிலிருந்துதான் உடலின் மற்ற பாகங்களுக்கு, நரம்பு அணுக்கள் வழியாகச் செய்திகள் கொண்டு செல்லப்படுகின்றன. இதற்கு, நரம்பணுவிலிருந்து வெளிவரும் ஏக்ஸான் (AXON) என்ற பாகமும், இதைச் சுற்றியிருக்கிற மைலீன் (MYELIN) என்ற புரதமும் முக்கியக் கருவிகளாக உதவுகின்றன. நரம்பணுவில் உற்பத்தியாகும் உடல் - மின்சாரத்தை, மற்ற உறுப்புக்களுக்கு ஒழுங்காகக் கொண்டு செல்லும் வேலையில் உதவுவது மைலீன் என்கிற புரதம் தான். இந்த மைலீன் பழுதாகி விட்டால், உடலுக்குத் தேவையான மின்சாரம் தடம் புரண்டு போய் விடும். மின் கம்பியிலுள்ள பாதுகாப்புப் பூச்சு - இன்சுலேடிங் கேபிள் - பழுதடைந்து விட்டால், எப்படி மின்சாரம் தடம் புரளுமோ, அது போல, மைலீன் சீர்குலைந்து, தழும்புகள் உண்டாகும்போது மூளை - தண்டு வடம் இவற்றிலிருந்து அனுப்பப்படும் உத்தரவுகள், அல்லது செய்திகள், உடலின் மற்ற உறுப்புக்களுக்கு ஒழுங்காய்ச் சென்று அடைவதில்லை. இந்த நிலையைத் தான் மத்திய நரம்பு பன்மைத் தழும்புகள் (Multiple sclerosis - MS) என்கிறோம்."



• தேவி பாலா

**"மைலீன் ஏன் சிர் குலைய வேண்டும். (அதன்பாட்டுக்குச் சும்மா இருக்க வேண்டியதுதானே?) அதற்கு என்ன காரணம்?"**

"மைலீன் சிர்குலைந்து தழும்புகள் ஏற்படுவதற்கான காரணம் எதுவென்று இதுவரை அறியப்படவில்லை!"

**"ஸோ, இருபதிலும் எம்.எஸ்.வரும். சரி, அதற்கான அறிகுறிகளாவது வெளிப்படையாகத் தெரியுமா?"**

"ஆரம்பத்து அறிகுறிகள் - மங்கிய பார்வை, குழறிய பேச்சு, மரத்துப் போதல், சொல்ல முடியாத தளர்ச்சி, உடல் வேதனை, எல்லா உறுப்புக்களும் சேர்ந்து இயங்க மறுக்கும் நிலை முதலியன. போகப் போக, சில உடல் உறுப்புக்கள் முற்றிலும் செயலிழந்து போகும். இது சில பேருக்குச் சில மணி நேரமும், சில துரதிர்ஷ்டசாலிகளுக்கு வாழ்நாள் முழுதும் நீடிக்கும். இது எப்போது வரும், எப்படி வரும், எவ்வளவு நாள் இருக்கும் என்பதை உறுதியாகச் சொல்லுவது மிகவும் கஷ்டம். வேண்டாத விருந்தாளி போல் வைத்துக் கொள்ளுங்களேன்!"

**"எந்த ஸ்பெஷலிஸ்டிடம் இந்த நோயாளி முதலில் போக வேண்டும்?"**

"ஜெனரல் பிராக்டிஷனர் (ஜி.பி) எனப்படும் உங்கள் குடும்ப டாக்டரே இதைக் கண்டுபிடித்துவிடுவார். பிறகு ஸ்பெஷலிஸ்ட்டான நியூரோஃபிஸிஷனிடம் அனுப்பி வைப்பார். அவர் எம்.ஆர்.ஐ. ஸ்கான் எடுக்கச் சொல்வார். அதிலிருந்து நோயின் தாக்கத்தைக் கண்டு கொள்வார். மருந்துகள் எழுதிக் கொடுப்பார்.

"இது தொற்றுநோய் அல்ல. எய்ட்ஸ் மாதிரி உயிர்க் கொல்லியும் அல்ல. ஹெரிடிடரி எனப்படும் பரம்பரைக் கோளாறு என்று சொல்லவும் போதிய சான்றுகள் இல்லை. குளிர்ச்சி

"இல்லை. இந்த நரம்புப் புரதம் கரைந்து போகும் காரணத்தை நாம் இன்னும் கண்டு பிடிக்காததால், இந்த நோயை முற்றிலும் குணப்படுத்த முடியவில்லை. ஆனாலும், தசைகள் இறுகி, வலி உண்டாகி, சலிப்படையச் செய்வதைத் தடுக்க மருந்துகள் இருக்கின்றன. போதிய ஓய்வு, உணவுக் கட்டுப்பாடு, உடற்பயிற்சி, உற்சாகம் தரக்கூடிய பேச்சு இவை உதவும். மைலீன் சிர் குலைந்த நிலையை நிர்ணயிக்க, நம் நாட்டில் பரிசோதனை வசதிகள் இப்போது இருக்கின்றன. ஆனால் அதிகச் செலவு என்பதால் பெரும்பாலோர் பயன்படுத்த முடிவதில்லை. அதனால், இந்த நோய் பரவலாக இருந்த போதிலும், நமக்குத் தெரிய வராமல் இருக்கிறது."

**"முதல் முதலில் இங்கே சென்னையில், பன்மைத் தழும்புகள் நோயாளியைக் கண்டதாகச் சொன்ன டாக்டர் யார்?"**

"டாக்டர் அர்ஜுன்தாஸ். இவரும் டாக்டர் ஜகந்நாதனும் சில நோயாளிகளைக் கவனிக்க நேர்ந்தது. ஆப்டிக் நெர்வ் எனப்படும் கண் பார்வை நரம்பு பாதிக்கப்பட்டு, பார்வை திடீரென்று போய் மறுபடி வரும். இது இரண்டு தடவைகளுக்கு மேல் வந்தால், மருத்துவரிடம் போய் விடுவது நல்லது..."

எம்.எஸ். இந்திய அமைப்பு 1985 ஆம் வருடம் மும்பை நகரில் தொடங்கப்பட்டது. பொதுமக்களிடம் இந்த நோய் பற்றிய விழிப்புணர்வை உண்டாக்க; இந்த நோய் பாதித்தவர்களைக் கண்டு பதிவு செய்ய; அவர்களுக்கு முழு விளக்கம் அளிக்க; தாழ்ந்த பொருளாதார நிலையில் உள்ளவர்களாயிருந்தால் மருத்துவ உதவி அளிக்க; அவர்களோடும், அவர்கள் குடும்பத்தினரோடும் கலந்து பழகி ஆறுதல் அளிக்க- என்று சில குறிக்கோள்களுடன் துவங்கப்பட்டது.

# புதிய பயங்கரம்!

மிகுதியாக உள்ள பிரதேசங்களில் இது மிகுதியாகக் காணப்படுகிறது."

**"சென்னை குளிர்ச்சியான நகரம் இல்லையே?"**

"குளிர்தான் காரணம் என்பது ஒரு கட்டுக் கதையாகக்கூட (ஆராய்ச்சிபூர்வமான முடிவு அல்ல) இருக்கலாம்... ஒருவேளை குளிர் பிரதேசத்திலிருந்து சூடான பகுதிக்கு வந்தவர்களுக்கு இது வரலாம். இன்னொன்று, பெண்கள்தாம் இதனால் அதிகமாகப் பாதிக்கப்படுகிறார்கள்!"

**"இது 'கட்டுக்கதை' இல்லையே?"**

"ஆமாம். அவர்களுக்கு பாலிஸியில் திங்கிங் அவசியம். நமக்கு இப்படி வந்துவிட்டதே என்று துவண்டு போய் விடக் கூடாது இல்லையா?"

சென்னைக் கிளையின் தலைவராக ஃப்ரண்ட்லைன் ஆசிரியர் (ஹிந்து) என். ராம் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறார்.

"ராம் மிக உற்சாகமாக உதவ முன் வந்திருக்கிறார். நோயாளிகளுக்கு போலி நம்பிக்கை கொடுக்கக் கூடாது என்று குறிப்பாகச் சொன்னார். நிர்வாக விஷயத்தில் வெகுவாக உதவுகிறார்!" என்றார் தேவிபாலா.

**— சாருகேசி**

# மறுபடியும் ப்ரியா!

பொய்த்துப் போன எதிர்பார்ப்பு என்பதற்கு திரையுலகில் சரியான உதாரணம்.... நடிகை ப்ரியா ராமன்!

பாரதிராஜா கண்டுபிடித்து, 'ரிசர்வ்' செய்து வைத்திருந்த நடிகை!

ரஜினியின் சொந்தப் படக் கதாநாயகி! (வள்ளி)

சிதாவை உரித்து வைத்த முகச் சாயல்!

அட்சரம் பிசகாத சாமுத்திரிகா லட்சணம்!

போன்ற முன்னுரைகளுடன் 'வள்ளி'யில் அறிமுகமான இவர், சில படங்களுக்குப் பிறகு காணாமலே போனார். படையெடுத்து வந்த பம்பாய் வரவுகளினால் ரசிக நினைவிலிருந்து ம(றை)றந்தும் போனார்.

இப்போது மீண்டு(ம்) வந்திருக்கிறார் ப்ரியா ராமன்! 'சூர்யவம்சம்' படத்தில் சற்றே நெகடிவ்வான கேரக்டரில் முகம் காட்டியதன் மூலம் மறுபிரவேசம்!

**மறுபிரவேசம் மகிழ்ச்சியான பிரவேசம்தானே ப்ரியா?**

"அப்கோர்ஸ்! ரொம்ப சந்தோஷமா ஃபீல் பண்றேன். என்னதான் வேற மொழிகள்ல பிஸியா இருந்தாலும் அறிமுகமான இடத்துல ஷைன் பண்ணாம இருந்தது வருத்தமாவே இருந்திச்சு. இப்ப அது போயே போச்சு."

நெற்றியில் வந்து விழும் கேசங்களை லாகவமாகக் கோதி விட்டபடி சிரிக்கிறார்.

படத்தில் பார்ப்பதைவிட நேரில் இளமையாக மட்டுமல்ல - கொஞ்சம் ஸ்லிம்மாகவும் தெரிகிறார் ப்ரியாராமன்.

**"தீவிர உணவுக் கட்டுப்பாடு...?"**

"ஆமா. அது மட்டுமல்ல... தினம் ஹெல்த் கிளப்பும் போறேன். ஷூட்டிங் இல்லைன்னா வீட்டுலேயே இருக்க மாட்டேன். உடற்பயிற்சி செய்யக் கிளம்பிடுவேன். எப்ப வருவேன்னு எனக்கே தெரியாது." என்ற ப்ரியா ராமன் 'சூர்ய வம்சம்' வெளி வந்த பிறகு எட்டு கிலோ எடைக் குறைப்பு செய்திருக்கிறாராம். (அம்மாடியோவ்!)

"கதாநாயகி என்றால் இப்படித்தான் இருக்கணும்னு ஆடியன்ஸ் எதிர்பார்க்கிறாங்க. பர்ட்டிகுலரா... ஸ்லிம்மா இருக்கணும். மத்த மொழிகள்ல இப்படி இல்லை. அங்க எல்லாம் நல்லா பெர்ஃபார்ம் பண்ணினாலே போதும்."

தான் இளைத்ததற்குக் காரணம் தருகிறார் ப்ரியாராமன்.

**சரி. 'சூரிய வம்சம்', ப்ரியாராமனின் மார்கெட்டை சூடு பிடிக்க வைத்திருக்கிறதா?**

முகத்தில் மகிழ்ச்சியும், வருத்தமும் சம விகிதத்தில் பிரதிபலிக்க, பதில் வருகிறது.

"சூர்ய வம்சம் படத்தில் நடிக்க கமிட்டானதிலிருந்தே நிறைய ஆஃபர்ஸ் வந்துக்கிட்டுதான் இருக்கு. மலையாள, கன்னடப் படங்கள் ஃபினிஷிங் ஸ்டேஜில இருந்ததால சில படங்களை மறுக்க வேண்டிய சூழ்நிலை. இப்ப ஓரளவுக்கு ஃப்ரீயாயிட்டேன். தமிழ்ல நடிக்கணும்ங்கிறதுக்காகவே மத்த மொழிப் படங்களைக் குறைச்சிக்கிட்டிருக்கேன்.

'சூர்ய வம்சம்' ரிலீஸானதுக்கப்புறம் நாலஞ்சு தமிழ்ப் படங்களுக்கு கேட்டிருக்காங்க. எல்லாமே வெரிகுட் சப்ஜெக்ட்ஸ்! ஆனா இண்டஸ்ட்ரி பிரச்னை சால்வ் ஆனதும்தான் ஷூட்டிங். பாருங்க என் நேரத்தை... படங்கள் வந்தும் பயன் இல்லை"

என்றாலும் இம்முறை தமிழில் நிலையான இடத்தைப் பிடித்தே தீருவது என்பது ப்ரியாவின் வைராக்கியமாம். அதற்காக காதைத் தீட்டிக் கொண்டு கதை கேட்கிறார்.

"மொதல்ல நான் மட்டும் கதையைக் கேட்பேன். அப்புறம் அம்மா, அப்பா, தங்கச்சி பிரபா எல்லார்கிட்டேயும் சொல்லி அபிப்பிராயம் கேட்பேன்."

**"தமிழ்ப் படங்களில் கதாநாயகிகளின் பங்களிப்பு என்பது ரொம்பவே குறைவு. அதிகபட்சம் பத்து காட்சிகள் + பாடல் காட்சிகள்தான் இவர்களுக்கான கோட்டா! இந்த ஃபார்முலாவை மீறி வெற்றிக் கொடி பறக்க விட முடியுமா?**

"ஏன் முடியாது? ஹீரோயின்

சப்ஜெக்ட்ஸ் அமைஞ்சா நம்ம திறமையைக் காட்டலாம். அதுக்கான வாய்ப்பு சரியா அமையணும். அவ்வளவுதான். என்னைப் பொருத்த வரைக்கும் எத்தனை சீன்ல வர்றோம்ங்கிறது முக்கியமே இல்லை. எப்படி வர்றோம்ங்கிறதுதான் முக்கியம். சூர்ய வம்சம் படத்தையே எடுத்துக்குவோமே... அதில நிறைய ஆர்ட்டிஸ்டுகள் இருந்தும் எனக்கு சிறப்பு கவனம் கிடைச்சதா, இல்லையா?"

**"போகட்டும். மற்ற மொழிகளில் உங்கள் மார்க்கெட் நிலவரம் எப்படிங்க?"**

"மலையாளத்தில எனக்கு நல்ல ரெஸ்பான்ஸ். ஊர்வசி, ஷோபனாவுக்கப்புறம் பெரிய டைரக்டர்ஸ், பெரிய நடிகர்கள் படங்கள்ல நடிச்சது நானாத்தான் இருக்கும். இதில சந்தோஷமான விஷயம் என்னன்னா... எல்லாப் படங்களுமே சூப்பர் ஹிட்!. அதே மாதிரி தெலுங்கு, கன்னடத்திலேயும் ஒரு ரவுண்ட் வந்திட்டேன்." என்கிற ப்ரியா ராமனுக்கு பாலிவுட்டிலும் கலக்க வேண்டும் என்ற ஆசை இருக்கிறது. "நல்ல வாய்ப்பு கிடைச்சால் விட மாட்டேன்" என்று சொல்கிறார்.



**ஹிந்தியில் நடிக்கப் பிரதான தகுதி... கவர்ச்சி! குடும்பப் பாங்கான முக அமைப்பு கொண்ட ப்ரியா ராமனால் கவர்ச்சியாக நடிக்க முடியுமா?**

"முடியாதுன்னு ஏன் நினைக்கிறீங்க? நிச்சயமா முடியும். அதுக்காக அசிங்கமான டிரஸ் எல்லாம் போட மாட்டேன்."

என்றதோடு நிறுத்திக் கொள்ளாமல் எல்லா நடிகைகளும் சொல்லும் 'ரெடிமேட் ஸ்லோகனை' ப்ரியாவும் சொல்கிறார்.

"கவர்ச்சி வேறு. ஆபாசம் வேறு. ஒரு போதும் ஆபாசமாக நடிக்க மாட்டேன்."

இதற்கு ப்ரியா ராமன் சொல்லும் காரணம்.... அவருடைய குடும்ப கௌரவம்! அப்பா ராமன் அமெரிக்காவில் ஒரு நிறுவனத்தில் பெரிய அதிகாரியாகப் பணிபுரிகிறாராம். அவருக்குத் தன்னால் கெட்ட பெயர் வந்து விடக் கூடாது என்பதில் உறுதியாக இருக்கிறார்.

**நல்ல விஷயம்! ஆனால் நடிகை என்று வந்த பிறகு இப்படியெல்லாம் கொள்கைப் பிரகடனம் செய்வது உதவுமா? ஒருவேளை இப்படியான கண்டிஷன்தான் தமிழில் அவர் காணாமல் போகக் காரணமா?**

"நடிப்புங்கிறது ஒரு தொழில். நிறைய பணம் கிடைக்குங்கிறதுக்காக எப்படி வேணும்னாலும் நடிக்க முடியுமா? மத்தவங்க பத்தி எனக்குக் கவலை இல்லை. ஆனால், நான் அப்படி நடிக்க மாட்டேன். எனக்குன்னு ஒரு கொள்கை இருக்கு. பணம், புகழுக்காக அதை காம்ப்ரமைஸ் பண்ண என்னால முடியாதுப்பா." என்ற ப்ரியா, தமிழில் நிலைக்க முடியாமல் போனதற்கும், தன் கொள்கைக்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்கிறார்.

**வேறு என்னவாம்?**

"'வள்ளி'யில நடிச்சுக்கிட்டிருக்கும் போதே ஐ.வி. சசியோட 'அர்த்தனா'ங்கிற மலையாளப் படம் வந்திச்சு. பெரிய டைரக்டர் படமாச்சேன்னு நடிக்க ஒத்துக்கிட்டேன். அது ஹிட்டாகி மலையாளத்தில பிஸியானேன். அப்புறம் தெலுங்கு, கன்னடம்னு போயிட்டேன். இதான் உண்மையான காரணம்."

படபடவென பதில் வருகிறது ப்ரியா ராமனிடமிருந்து.

இதை நம்புவதும், நம்பாததும் வாசகர்களே, உங்கள் சாய்ஸ்!

பேட்டி: **ஜெ. பிஸ்மி**

அட்டை வண்ணப்படம், படம்: **பிரவீண்குமார்**



# சென்னையில் கேசரி! 'சைக்கிளி'ல் வாழப்பாடி?

சென்னை வந்தார் கேசரி. அவருக்கு முன்னால் தங்கபாலு கரிபூசிக் கொள்ளப் போகிறார் என்று எதிர்பார்த்திருந்த எதிர்கோஷ்டிகளுக்குப் பெரும் ஏமாற்றம்; அபாரக் கூட்டம்! சென்னைக்கு அருகில் உள்ள மாவட்டங்களிலிருந்து தங்கபாலு திரட்டிக் கொண்டு வந்தாரா? தங்கபாலுவுக்காக திரண்டு வந்தார்களா?(!) சலனத்தோடு பார்க்க வைத்த கூட்டம்.

ஜோடனையற்ற அந்தக் கிராமத்து மக்கள் விமானங்கள் ஏறும்போதும் இறங்கும்போதும் வேடிக்கைப் பார்க்க தடுப்புச் சுவருக்கு ஓடினார்கள். தாமதமாக வந்து, நீண்ட நேரம் கேசரி பேசப் போகிறார் என்று எதிர்பார்த்திருந்த மக்களுக்குப் படு ஏமாற்றம். மூணு நிமிஷம்தான் கேசரியின் சொற்பொழிவு! த.மா.கா.வினர் தலித் மாநாட்டைக் கூட்டி விட்டார்கள் என்ற ஒரே காரணத்திற்காக, கேசரி பொருளற்ற தொனியில் தமது தலித் ஆதரவுச் சிந்தனைகளை திரும்பத் திரும்ப சொன்னது சுவாரசியப்படுத்தவில்லை. மொழிபெயர்த்த தங்கபாலு இதைப் புரிந்து கொண்டு ஒருமுறை எடிட் செய்து மழுப்பினார். ஆனால் கேசரி நிதானமாகப் பேசும்போது தங்கபாலு மட்டும் உணர்ச்சிவசமாகக் கத்திப் பேசியது ஏன் என்று புரியவில்லை. மொழிபெயர்ப்புகூட சாராம்சமாக இருந்ததே தவிர, நேரடியாக இல்லை.

''தங்கபாலுதான் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர்'' – அழுத்தமாகப் பத்திரிகையாளரிடம் கேசரி சொன்னதும் தங்கபாலுவின் வலது கரங்களுக்கு ஆனந்தம். கட்சியின் அடிமட்டத் தொண்டர் ஒருவரிடம் அணுகி, ''ஏனுங்க வாழப்பாடியார், கேசரியை வரவேற்கவில்லையா?'' என்றோம். ''அவரு சைக்கிள் சின்னத்திலயில்ல இருக்காரு!'' – திட்டவட்டமாகச் சொன்னதும் வாயடைத்துப் போனோம்!



– வேணுஜி

தாராளமயமாக்கல், சந்தைப் பொருளாதாரம் எல்லாமே இந்தியாவில் காலூன்றத் தொடங்கி விட்டன. சர்வதேச ராட்சத நிறுவனங்கள் எல்லாம் இந்தியாவில் காலெடுத்து வைத்துவிட்டன. மற்றொருபுறம் ஹோல்சேலாகக் கடன் கொடுக்கும் உலக வங்கி இலவசத் திட்டங்களையெல்லாம் மூட்டை கட்டி வைத்துவிட வேண்டும் என்று நிபந்தனை விதிக்கிறது. இந்த நிலையில் மக்கள் நலத் திட்டங்கள் எல்லாம் வருங்காலத்தில் எந்த மட்டில் இருக்கும்? இருக்க வேண்டும்?

இப்படியொரு உருப்படியான ஒரு தேசியக் கருத்தரங்கத்தை சமீபத்தில் சென்னையில் நடத்தி, மேற்படி கேள்விகளுக்கு விடைகாண முயற்சி செய்தது சத்யமூர்த்தி சென்டர் ஃபார் டெமாக்ரடிக் ஸ்டடீஸ்!

தமிழக சட்டசபை சபாநாயகர் பழனிவேல் ராஜன், ''மக்கள் நலத் திட்டங்கள், ஜனநாயகத் தேர்தல் முறை இருக்கும் வரை, குறைய வாய்ப்பில்லை'' என்றார். ''எந்த நாட்டிலுமே ஏழ்மையில் தவிக்கும் மக்கள் தங்களை அரசு பாதுகாக்க வேண்டும் என்றே எண்ணுவார்கள். சென்ற ஆண்டு அமெரிக்கா சென்றிருந்தேன். தனிப்பட்ட முறையில் தான். அங்கெல்லாம் சில முக்கிய சாலைகளையும், பாலங்களையும் கட்டும் பொறுப்பை தனியார் வசம் விட்டு விடுவார்கள். அவர்கள் அந்த சாலைகளைப் பயன்படுத்தும் வாகன ஓட்டிகளிடமிருந்து கட்டணம் வசூலிப்பது வழக்கம். இப்படி கட்டணம் வசூலிப்பதற்காக ஆயிரக் கணக்கான இளைஞர்களும், இளம்பெண்களும் நியமிக்கப்பட்டிருந்தார்கள். நடுவே 'டோல் நெட்' என்ற தொழில்நுட்ப முன்னேற்றம் இதில் புகுந்தது. இதன்படி குறிப்பிட்ட இடங்களில் உள்ள வலைப்பகுதியில் உரிய கட்டணத்தைப் போட்டு விட்டால், சாலையை மறித்துள்ள தடை தானாக மேலெழும்பி வழி கொடுக்கும். இந்த முறையின் காரணமாக பலரும் வேலையை இழக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. பெரும் எதிர்ப்பு. இதன் காரணமாக 'டோல் நெட்'டுகளுடன் பக்கத்திலேயே (வேலையில்லாமல், சம்பளம் பெறும்) இளைஞர்கள் நிற்கும் வேடிக்கையும் பார்க்க முடிந்தது. பணக்கார நாடு, சந்தைப் பொருளாதாரத்துக்கு ஓர் உதாரணம் என்று கூறப்படும் அமெரிக்காவிலேயே இப்படிப்



• பழனிவேல்ராஜ

# உருப்படியான விஷயங்களுக்காக ஒரு கருத்தரங்கு!

பட்ட நிலை என்றால் இந்தியாவிலா மக்கள் நலத் திட்டங்கள் வாபஸ் பெறப்படும்?'' என்றார்.

இதே கருத்தரங்கில் முன்தினம் "அரசின் இலவசத் திட்டங்களில் பெரும்பாலானவை அவசியமற்றவை!'' என்று சாடியிருந்தார் தமிழக உயர்கல்விக் குழுவின் துணைத் தலைவரான டாக்டர். எம். ஆனந்தகிருஷ்ணன். "வறுமைக் கோட்டின் கீழே இருப்பவர்களுக்கு ஒரு வேட்டி அல்லது ஒரு சேலை என்று கொடுத்தால் கூட அரசுக்கு சுமார் எண்பது கோடி ரூபாய் இழப்பு நேரிடும்! இதைக் கொடுக்கவில்லையென்றால் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது.



• மதுதண்டவதே

• ஆனந்த கிருஷ்ணன்

உடைகளின் அடக்க விலையை விட, அவற்றை விநியோகிக்க ஆகும் செலவும், இடைத்தரகர்களின் சுருட்டலும் வேறு. இந்த நிலையில் வோட்டு வங்கியை மனத்தில் கொள்ளாத அரசு இந்தத் தொகையைக் கல்வி, மருத்துவம், சாலை வசதி ஆகியவற்றுக்குத்தான் செலவழிக்கும்!'' என்றார்.

மத்திய திட்டக் கமிஷனின் துணைத் தலைவராக விளங்கும் பேராசிரியர் மது தண்டவதேயின் பேச்சுக்கு பலத்த வரவேற்பு.

"சமூகநலத் திட்டங்கள் உரிய முறையில் நடைமுறைப்படுத்தப்பட்டால் சந்தோஷம் தான். ஆனால் இந்தப் போர்வையில் யார் யாரோ கொள்ளையடித்தால் அந்தத் திட்டங்களின் மீதே கசப்புணர்வு ஏற்படுகிறது. உர மானியம் தருவது என்பது விவசாயிகளின் கோணத்தில் இருக்க வேண்டுமே தவிர, உரத் தொழிற்சாலைகள் தங்கள் தரம் குறைந்த உரங்களை இந்தச் சாக்கில் தலையில் கட்டி லாப மடைவதாக இருக்கக் கூடாது.

"வாழ்வதற்கான அடிப்படை உரிமையை நம் அரசியல் அமைப்பு அளித்திருக்கிறது. ஆனால் இதுகூட பெண்களுக்கு இல்லையோ என்று கருதும் வகையில் பெண் சிசுவதை நடந்து வருகிறது. இந்த நிலையை மாற்றி அமைக்கத் தேவையான பொதுநலத் திட்டங்கள் தொடரத்தான் வேண்டும். பிரிட்டனில் லேபர் அரசு பலவித சமூகத் திட்டங்களை அறிமுகப்படுத்தியது. பின்னர் கன்ஸர்வேடிவ் கட்சி அங்கு அரசமைத்தவுடன், இந்தத் திட்டங்களைத் தொடராது என்று பலரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் தொடங்கிய திட்டங்கள் தொடரவே செய்தன. எனவே சமுதாயத் திட்டங்கள் மிக முக்கியமானவை.

"அதே சமயம் இதுபோன்ற திட்டங்களுக்கு எல்லாம் பணம் எங்கிருந்து வரும்? டென்மார்க்கிலும் ஸ்வீடனிலும் 85 சதவீதம் பேர் வருமானவரி செலுத்துகிறார்கள். இந்தியாவிலோ ஒரு சதவிகிதத்துக்கும் குறைவானவர்கள்தான் வருமானவரி கட்டுகிறார்கள். போதாக்குறைக்கு இன்னும் சலுகைகள் கேட்கிறார்கள். ஆயிரம் ரூபாய்க்கு ஒருவருக்கு அதிகப்படி வருமானவரி விலக்கு என்றால் அரசின் வருமானம் நூறு கோடி ரூபாய் குறைகிறது. இப்படியிருக்க மக்கள் நலத் திட்டங்களை எப்படி அரசு அமுல்படுத்த முடியும்?

"அளவுக்கதிகமான செல்வம் சேர்த்திருப்பவர்கள் தங்களைப் பொதுநிதியின் ட்ரஸ்டியாகக் கருதி செயல்பட வேண்டும்' என்றார் காந்திஜி. இது மட்டும் ஓரளவாவது நடைமுறையில் செயல்படுத்தப்பட்டால் நாடு வளம் பெறும். பொதுநிதியிலிருந்து ஞாபகமறதியால் டோங்கா வாலா ஒருவனுக்கு ஐந்து ரூபாய் அதிகம் தந்து விட்டதற்காக ஆச்சார்ய கிருபளானிக்கு அன்றைய இரவு உணவு கட் என்றார் காந்திஜி. அவரெங்கே, கோடிக்கணக்கில் கூச்சமில்லாமல் பொதுப் பணத்தை சுயநலத்துக்குப் பயன்படுத்தும் இன்றைய அரசியல்வாதிகள் எங்கே?'' என்றபோது பலத்த கைதட்டல்.

— ஜி.எஸ்.எஸ்.

# ஆடுகள் மாநாடு

ஆடுகள் மாநாடு...
புத்தர் தோள்மேல் பயணம் போன
சரித்திரப் புகழ் பெற்ற
சந்ததியில் வந்த
ஆடுகள் இலகம் அலங்கரித்தது
தலைமையை!

புல் மாலைகள்
தழைத் துண்டுகள்
ஒவ்வொரு வட்டத்து ஆடுகளும்
அணிவித்தன.

கூரிய கொம்பேந்திய
ஆடுகள்
தலைவரின் இருபுறம்
பாதுகாப்புப் படையாக
நின்றன பார்வையில்
ஆயத்தம் பதித்து...

தாடி வளர்ந்த
கிழ ஆடு ஒன்று எழுந்தது
முதலில் பேச...

'ஆட்டுக்கார அலமேலு'
படத்தில் நடித்த ஆடு முதல்
கலையுலகத் தாரகைகள்
காசை, கவர்ச்சியை, விளம்பரத்தைக்
காட்டிக்
கட்சியை உடைக்கவோ கைப்பற்றவோ
எத்தனிக்கலாம்
எச்சரிக்கை! என்று தொடங்கியது.

செம்மறி என்றும்
குரும்பை என்றும்
வெள்ளாடு என்றும் நம்முள்
வேறுபாடுகள் வேண்டியதில்லை!

'ஆடுவோமே
பள்ளுப் பாடுவோமே
ஆடுகள் எல்லாம் சமம் என்றே
ஆடுவோமே
என்று ஆடிப் பாடியபோது
மே! மே! என்று குரல்களைக்
கோத்துக் கொண்டன.

**தமிழன்பன்**

ஓநாய்கள் அழுவதன்
உட்பொருளை
ஒரு மண்டலப் பிரதிநிதி ஆடு
பதவுரை பொழிப்புரையோடு
பரிமாறியது.

"அரசியல்வாதிகள்
உருகுவதைப் பார்த்துத்
தேர்தல் நாளில் ஏமாந்து போகும்
ஏழை வாக்காளர்களைப் போல
எம்மை எண்ணுகின்றனவா
ஓநாய்கள்?
அந்த அளவு
அறிவில்லாச் சமூகமா நாம்?
பழிமொழியான பழமொழிக்குப்
பாடை கட்டுவோம்"
பந்தல் நடுங்கக்
கரவொலி முழங்க அந்த ஆடு
சிற்றுரை முடித்துச்
சோடா குடித்தது.

மேலும் சில ஆடுகள்
மைக் பிடித்து மகிழ்ந்த பிறகு

தழையாடையைச்
சரி செய்து கொண்டு, தலைமை தாங்கிய
ஆடுகள் இலகம்
எழுந்து நின்றது.

"ஆட்டுக்கும் வாலை
அளந்து வைத்தான் ஆண்டவன்
என்கின்றனர்.

நமக்கு
வாலைக் குறைத்ததற்காக
நாம் வருந்தப் போவதில்லை...
வளர்ச்சியின் அடையாளம் என்று
விஞ்ஞானம் விளக்குகிறது...

ஆனால் எண்ணிக்கையில் குறைந்து
பலியாகிக் கொண்டிருந்தோம்
நாம்!

நம் மாபெரும் புரட்சித் தலைவர்
புத்தர்
நம்மையும் மனித மந்தையையும்
கடைத்தேற்ற வந்தார்
கடைத் தேறிவிட்டோம் நாம்...
மனித மந்தை?"

கேட்ட கேள்வியுடனும்
இண்டல் சிரிப்புடனும்
கரவொலியும் சேர
காலை நிகழ்ச்சி முடிந்தது!

# சார்லஸின் புதிய கூட்டணி!

இளவரசி டயானா இறந்த பிறகு, சார்லஸின் போக்கு கொஞ்சம் மாறியிருக்கிறது. தன் இமேஜை மக்கள் விரும்பும்படியாக மாற்றியமைத்துக் கொள்ள சார்லஸ் கடும் முயற்சிகள் செய்கிறாராம்.

சமீபத்தில் வட இங்கிலாந்தில் உள்ள மான்செஸ்டர் பகுதியில் மக்கள் வெள்ளம் இவரைச் சூழ்ந்தபோது வழக்கத்துக்கு மாறாக நின்று நிதானித்து அவர்களுடன் பேசியிருக்கிறார். ஏற்கெனவே ஒரு தாளில் எழுதி வந்திருந்த குறிப்புகளை அவ்வப்போது பார்த்தபடி "டயனாவின் இறப்பைத் தொடர்ந்து நீங்கள் அடைந்த சோகம் மற்றும் அளித்த ஆறுதல் வார்த்தைகள் எனக்கும் என் குழந்தைகளுக்கும் எந்த அளவுக்கு நிம்மதியைக் கொடுத்துள்ளது என்பதை என்னால் வார்த்தைகளில் கூற முடியவில்லை" என்று கூற, மக்களிடையே சலசலப்பு. பலர் அழுதார்கள். பலர் கைதட்டினார்கள். ஆறுதலாக சார்லஸின் கையைக் குலுக்கியவர்களும் உண்டு.



முக்கியமாக "வில்லியமும், ஹாரியும் எப்படி இருக்கிறார்கள்?" என்று நெகிழ்ச்சியோடு கூட்டத்தினர் ஒட்டுமொத்தமாகக் கேட்டிருக்கிறார்கள். தனது இரு மகன்களும்தான் மக்களுக்கும் தனக்குமிடையே உள்ள பாலம் என்பதை சார்லஸ் நன்றாகவே உணர்ந்திருக்கிறார். தாயில்லாக் குழந்தைகள் (அதிலும் ஒருவர் வருங்கால மன்னன்) என்று மக்கள் கொட்டும் பரிதாப உணர்வில் ஒரு பகுதியையாவது "தாயில்லாக் குழந்தைகளை வளர்க்க வேண்டிய நிலையில் உள்ள தகப்பன்" எனும் வகையில் தான் பெற கடுமையாக முயற்சிக்கிறார். "என் மகன்களைப் பற்றி நான் மிக மிகப் பெருமைப் படுகிறேன். மிகவும் வேறுபட்ட, வேதனையான சூழலை அவர்கள் அசாதாரணத் துணிவுடன் எதிர் கொள்கிறார்கள்" என்று அடிக்கடி கூறுகிறார்.

சொல்லப் போனால் டயானா இறந்திருக்காவிட்டால்கூட, பொதுமக்களிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்பை சார்லஸ் வலியவே உண்டாக்கிக் கொண்டிருப்பார் என்கிறார்கள் இளவரசருக்கு வேண்டியவர்கள். காரணம் "சார்லஸ் வருங்கால மன்னனாவதில் உங்களுக்கு விருப்பமா?" என்று அவருக்குத் திருமணமான புதிதில் கேட்டபோது, 82 சதவிகிதமாக இருந்த "ஆமாம்" என்றவர்களின் எண்ணிக்கை அவரது விவாகரத்துக்குப் பிறகு 41 சதவீதமாகக் குறைந்து விட்டது. இந்தப் பள்ளத்தை ஈடு செய்ய வேண்டியது அவசியம் என்று கருதுகிறார் சார்லஸ்.

பல நல்ல விஷயங்களுக்கு சார்லஸ் வாரி வழங்கியிருக்கிறார் என்பதை சமீபகாலமாக பட்டியலிடத் தொடங்கியிருக்கிறார்கள் பக்கிங்ஹாம் அரண்மனையின் மக்கள் தொடர்பு அதிகாரிகள்.

சார்லஸின் இமேஜ் உயர உதவிக்கரம் நீட்டியிருப்பவர் இங்கிலாந்து பிரதமர் டோனி ப்ளேர். டயானாவுக்கு பெரும் சிறப்பான இறுதி ஊர்வலத்தை ஏற்பாடு செய்ய இருவருமே ஒத்துழைத்தனர். இருவரும் நெருங்கிய நண்பர்கள் அல்ல. என்றாலும் அரச குடும்பத்துக்கு அளிக்கப்படும் மான்யம் குறைக்கப்பட வேண்டும் என்பது போன்ற தீர்மானங்களில் இருவருமே ஒத்துப் போகிறார்களாம்.

— குல்லூ

28

அடுத்த நாள் காலை ஆண்டியை பள்ளிக்கூடத்தில் கொண்டு போய் விட்டு விட்டுத் திரும்பவும் ஆஸ்பத்திரிக்கு வந்து ஆலிஸனின் படுக்கையினருகே உட்கார்ந்திருந்தாள் பேஜ். இதைத் தவிர வேறு வாழ்க்கை இல்லை, வேறு ஜோலி இல்லை என்றாகி விட்டது.

இன்று ஆலிஸனின் கண் மீதிருந்த கட்டுக்களை அகற்றியிருந்தார்கள். ஒருமுறை அவள் இமைகள் அசைகிற மாதிரி தோன்றியது பேஜுக்கு. இல்லை. வெறும் பிரமை. சில சமயங்களில் மனம் எதற்காக ஏங்குகிறதோ அது நடைபெறுகிற மாதிரி பிரமை உண்டாகிறது.

கைகளிலும் கால்களிலும் ரத்த ஓட்டம் சீராக இருப்பதற்காக ஒரு டாக்டர் தினசரி வந்து ஆலிஸனுக்கு மஸாஜ் செய்து விடுவது வழக்கம். அவர் வருகைக்காகக் காத்திருந்த போது, "மிஸஸ் பிராட், உங்களுக்கு போன் வந்திருக்கிறது," என்று ஒரு நர்ஸ் அழைத்தாள்.

யாராக இருக்கும்? பேஜ் ஆச்சரியப்பட்டாள்.

இந்த நேரத்தில் அவள் ஆஸ்பத்திரியில் இருப்பது ஜேனுக்கும் பிராடுக்கும்தான் தெரியும். பிராடுதான் ஒருவேளை ஆலிஸனுக்கு எப்படி இருக்கிறது என்று கேட்பதற்காகக் கூப்பிடுகிறாரோ?

கூப்பிட்டவர், ஆண்டி படிக்கும் பள்ளியின் நிர்வாகி. "உங்கள் பிள்ளைக்கு ஒரு அடிபட்டு..." என்று அவர் சொன்னதுமே காலோடு தலை கலவரம் பற்றிக் கொண்டது பேஜுக்கு.

"என் பிள்ளையா?" என்றாள், ஏதோ தனக்குப் பிள்ளையே கிடையாதே என்பது போல. "என்ன... என்ன சொல்கிறீர்கள்?"

"ஸாரி, மிஸஸ் பிராட். ஒன்றுமில்லை. ஒரு சின்ன விபத்து. ஆண்ட்ரு விளையாடிக் கொண்டிருந்தபோது உயரத்திலிருந்து விழுந்து..."

'விழுந்து?' என்று பேஜ் கேட்கவில்லை. கேட்க முடியவில்லை. கழுத்து முறிந்திருக்குமா? அவனுக்கும் தலையில் காயம் பட்டிருக்குமோ? கடவுளே! இதற்கு மேல் என்னால் தாங்க முடியாது.

"என்ன... என்ன ஆயிற்று?" என்றாள்.

"தோள் பட்டையில் எலும்பு முறிவு ஏற்பட்டிருக்குமென்று தோன்றுகிறது. உடற்பயிற்சி ஆசிரியர் அவனை அங்கே - நீங்கள் இருக்கும் ஆஸ்பத்திரிக்குத்தான் அழைத்து வருகிறார். ஒன்றும் பெரிதாக இருக்காது. கவலைப்படாதீர்கள்," என்று சொல்லி போனை வைத்து விட்டாள் பள்ளிக்கூட நிர்வாகி.

நர்ஸிடம் சுருக்கமாக விஷயத்தைச் சொல்லிவிட்டு எமர்ஜென்ஸி அறைக்கு ஓடினாள் பேஜ். அங்கே ஆண்டி இன்னும் வந்து சேரவில்லை.

தான் ஒண்டியாக இந்த நிலைமையைச் சமாளிக்க முடியாது என்று பயம் பிடித்துக் கொண்டது அவளை. போனுக்கு ஓடினாள். அவரை... அவரைத்தான் கூப்பிட வேண்டும்.

அங்கே மணி அடித்தது.

"ஸாரி... உங்களைத் தொந்தரவு செய்ய வேண்டியிருக்கிறது... ஸ்கூலில் ஒரு விபத்து...."

அவள் கூப்பிட்டது தாரென்ஸனைத்தான்.



'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம். © டேனியல் ஸ்டீல்



மூலம் : டேனியல் ஸ்டீல்

தமிழில் : ரா. கி. ரங்கராஜன்

முதலில் அவனுக்கு யார் கூப்பிடுகிறார்கள் என்றே புரியவில்லை. புரிந்ததும், "என்ன விஷயம் பேஜ்?" என்றான் கவலையுடன்.

"ஆண்டி... கீழே விழுந்து விட்டானாம்... இங்கே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வருகிறார்கள்... எனக்கு ஒன்றும் புரியவில்லை... எமர்ஜென்ஸி அறையிலிருந்து பேசுகிறேன்..." அழத் தொடங்கி விட்டாள் அவள். விபரீதமான கற்பனைகளும் அச்சங்களும் மறுபடி முளைத்தன அவள் மனத்தில்.

"அங்கேயே இரு. இதோ வருகிறேன்," என்ற தாரென்ஸன், உடனே காரை எடுத்துக் கொண்டு தலை தெறிக்கும் வேகத்தில் ஆஸ்பத்திரியை அடைந்தான். அவன் அங்கே போவதற்கும் ஆசிரியரொருவர் காரிலிருந்து இறங்கி ஆண்டியைத் தூக்கிக் கொண்டு வருவதற்கும் சரியாக இருந்தது. உடற்பயிற்சி வகுப்பு நடந்து கொண்டிருந்தபோது அப்படியே ஓடி வந்தார் போலும். ட்ராக் சூட் உடையில், கழுத்தில் தொங்கும் ஊதலுடன் இருந்தார்.

ஆண்ட்ருவின் முகத்தில் வலியும் பயமும் தென்பட்டன. ஆனால் முழு நினைவோடு இருந்ததால் அபாயமாய் எதுவும் நேரவில்லை என்று புரிந்தது.

"என்னடா பையா, இது நோயாளிகள் வருகிற இடமாயிற்றே? இங்கே எங்கே வந்தாய்? உன்னைப் பார்த்தால் ஜம்மென்று இருக்கிறாயே?" என்று வேடிக்கையாய் பேசக் கொடுத்தவாறு ஆண்டியை உள்ளே அழைத்துக் கொண்டு போனான் தாரென்ஸன்.

ஆண்டியைப் பார்த்ததுமே பேஜுக்கு அழுகை வெடித்துக் கொண்டு வந்தது. ஆலிஸன் விஷயத்தில் அவள் கொண்டிருந்த தைரியமெல்லாம் இப்போது பறந்து விட்டது.

தாரென்ஸன் ஆண்டியை

நர்ஸிடம் ஒப்படைத்து அனுப்பிவிட்டு, உடல் பதற நின்றிருந்த பேஜைத் தன் பக்கம் மெல்ல அணைத்துத் தைரியம் சொன்னான்.

எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தபின், வலி தெரியாதிருக்க மருந்து கொடுத்துவிட்டு, எலும்பு முறிவை இழுத்து 'ஸெட்' பண்ணி, மாவுக் கட்டுப் போட்டார்கள். "நாளை ஒருநாள் ரெஸ்ட் இருந்தால் போதும். ஆனால் கட்டைப் பிரிக்க ஆறு வார காலமாகும். மோசமான எலும்பு முறிவு. சின்னப் பையனாகையால் சீக்கிரமே சரியாகிவிடும்," என்றார் டாக்டர்.

"வா, உங்கள் இரண்டு பேரையும் நானே வீட்டில் கொண்டு போய் விடுகிறேன்," என்று அழைத்துப் போனான் தாரென்ஸன். பேஜ் இருந்த மனநிலைமையில் அவளை நம்பி மூன்று சக்கர சைக்கிளில் போகக் கூட அனுமதிக்கக் கூடாது என்று அவனுக்குத் தோன்றியது.

வீட்டுக்குப் போகும் வழியிலேயே ஆண்டி தூங்கி விட்டான். அவனைப் படுக்க வைத்த தாரென்ஸன், "நீயும் கொஞ்ச நேரம் தூங்கு. எது உன் படுக்கை அறை?" என்றான்.

அவள் வழிகாட்ட, அவன் பின்னாலேயே வந்து, "ஏதாவது ட்ரிங்க் குடி," என்றான்.

படுக்கையில் உட்கார்ந்த பேஜ் கண்களில் கண்ணீர் மல்க அவனை ஏறிட்டு நோக்கினாள். என்ன வேலை இருந்ததோ என்னவோ, அத்தனையையும் தூக்கி எறிந்து விட்டு ஓடி வந்திருக்கிறாரே..

"எனக்கு ஒரே கலவரமாகி விட்டது. உடனே உங்களைத்தான் கூப்பிடத் தோன்றியது... ஸாரி..." என்றாள். ஏன் கணவனைக் கூப்பிடத் தோன்றாமல் இவனைக் கூப்பிடத் தோன்றியது என்று அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது.

"ஸாரியெல்லாம் சொல்லாதே. நீ கூப்பிட்டது பற்றி எனக்கு வருத்தம் இடையாது. இப்படி நேர்ந்து விட்டதே என்றுதான் வருத்தம்," என்றான் தாரென்ஸன், படுக்கைக்கு அருகிலிருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டு.

"தாங்க்யூ... எவ்வளவு நல்ல சிநேகிதர் நீங்கள்..." என்றாள் பேஜ் குரல் தழுதழுக்க.

அவன் அவளை நோக்கிக் குனிந்தான். எவ்வளவோ வருடங்களாக மறந்து விட்ட உணர்ச்சிகள் அவனுள் கிளர்ந்தன. "பேஜ்... உனக்குப் பிடிக்காத எதையும் நான் செய்ய மாட்டேன்..." என்றான். ரகசியம் பேசுகிற மாதிரி அவன் தொண்டை கிசுகிசுத்தது.

அவள் தன் பெரிய நீல விழிகளை அவனை நோக்கி உயர்த்தினாள். "இந்தப் பத்து நாளாக நான் படும் துன்பம்... நீங்கள் ஒருத்தர்தான் எனக்கு நண்பர்... உங்கள் ஒருவரைத் தான் நான் தைரியமாக நம்பியிருக்க முடிகிறது. நீங்கள் ஒருத்தர்தான்... எனக்கு எதுவும் தெரியவில்லை. எங்கே இருக்கிறேன், என்ன செய்கிறேன், என்ன நடக்கப் போகிறது என்று எதுவுமே தெரியவில்லை..."

"உஷ்! நீ எதுவும் சொல்ல வேண்டாம்," என்ற தாரென்ஸன் சரேலென அவளை வாரியெடுத்து அணைத்துக் கொண்டான். அவன் உதடுகள் அவள் உதடுகளை அழுத்தின. அவளுக்கு மூச்சு நின்றது. இதயங்கள் உருகி இருவரும் ஒன்றாகி விட்டது போல் உணர்ந்தான்.

செல்லமாக அவனை முதுகில் அடித்து, "போதும் நிறுத்துங்கள்," என்றாள்.

அவன் நிறுத்தவில்லை. மறுபடி மறுபடி முத்தமிட்ட பின்னரே விலகினான்.

ஒரு நிமிஷத்துக்குள் திடீரென்று பாய்ந்து விட்ட அந்த இன்ப வெள்ளத்தில் அவள் மூழ்கிப் போனாள். இது விளையாட்டல்ல, பிராட் செய்யும் துரோகத்துக்குப் பழிவாங்கும் செயலும் அல்ல என்று அவளுக்குப் புரிந்தது. அதே சமயம் பயமும் ஏற்பட்டது. கணவனுக்கும் தனக்கும் உள்ள 'பிரச்னையை ஒருவழியாக முடிவுக்குக் கொண்டு வரவேண்டும். அதன் பிறகே தாரென்ஸனுடன் உள்ள உறவை சீரியஸாக எடுத்துக் கொள்ள வேண்டும்...

அவள் யோசித்துக் கொண்டிருந்தபோது டெலிபோன் மணி அடித்தது. எடுத்து, "ஹலோ..." என்று சிறிது தயக்கத்துடனேயே கேட்டாள். ஆஸ்பத்திரியிலிருந்து ஆலிஸனைப் பற்றி என்ன திடீர்ச் செய்தி வருமோ என்ற திகில் அவளை விட்டகலவில்லை.

ஆனால் கூப்பிட்டது அவள் அம்மாதான். நியூயார்க்கிலிருந்து. "நானும் அலெக்ஸிஸும் ஞாயிற்றுக்கிழமை அங்கே வருகிறோம்," என்றாள். அலெக்ஸிஸ் என்பது பேஜின் அக்கா. அவள் கணவன் டேவிட் நியூயார்க்கில் பிளாஸ்டிக் சர்ஜனாக இருக்கிறான்.

"நோ, நோ! வேண்டாம் அம்மா," என்று பதைத்தாள் பேஜ். அம்மா, அக்கா இருவரையுமே அவளுக்குப் பிடிக்காது. "ஆலிஸன் இன்னும் கோமாவிலேயே இருக்கிறாள். ஆண்டி வேறே கீழே விழுந்து கையை முறித்துக் கொண்டிருக்கிறான். என் குழந்தைகளைக் கவனிக்கவே எனக்கு நேரமில்லை. தயவுசெய்து இப்போது வராதே," என்றாள்.

"இப்போதுதான் உனக்கு உதவி தேவை. அதற்காகவே வருகிறோம். ஞாயிற்றுக்கிழமை பகல் இரண்டு மணிக்கு அங்கே வந்து சேருவோம்."

போனை ஒரு பெருமூச்சுடன் வைத்து விட்டு, "இன்னொரு கஷ்டம்," என்றாள் தாரென்ஸனிடம்.

"உன் அம்மாவும் சகோதரியும் வருகிறார்கள்? அவ்வளவுதானே?"

"அவ்வளவுதானேயா? என் அக்கா அவள் ஜன்மத்தில் யாருக்கும் எந்த உதவியும் செய்தது

கிடையாது. என் அம்மாவும் அப்படித்தான். சின்ன வயதில் என் வாழ்க்கையை நரகமாக்கி யவர்கள் இரண்டு பேரும்!"

அப்படி என்னதான் நேர்ந்திருக்கும் என்று தாரென்ஸனால் ஊ. க்க முடியவில்லை. அவளை வியப்புடன் சிறிது நேரம் பார்த்து விட்டு எழுந்தவன், புறப்படுமுன் மறுபடியும் அவளை இறுகத் தழுவி முத்தமிட்டான்.

"ஊகூம். இப்போது வேண்டாம்," என்று அவன் காதோடு சொல்லி மெதுவாக விலகிக் கொண்டாள் பேஜ்.

"பேஜ், நான் முட்டாளில்லை. உன்னை அவசரப்படுத்த மாட்டேன். நீ என்னிடம் நிரந்தரமாக வர வேண்டும். அதுவரை காத்திருப் பேன்,"என்று கூறிவிட்டு அவன் புறப்பட்டான்.

புதன்கிழமை பிராட் சிகாகோவிலிருந்து திரும்பினான். அடுத்தடுத்த நாள் மறுபடியும் போவதும் வருவதுமாகவே இருந்தான்.

ஆண்டி கையை ஒடித்துக் கொண்டிருப்பது ஒருபுறம் எரிச்சலென்றால், பேஜின் அம்மாவும் அக்காவும் வருவது இன்னொரு எரிச்சல். அவ னுக்கும் அவர்களைக் கண்டால் பிடிக்காது.

"எதற்காக அவர்களைக் கூப்பிடுகிறாய்? வர வேண்டாமென்று சொல்ல வேண்டியது தானே?" என்று இரைந்தான்.

"நானா கூப்பிட்டேன்? அவர்களாக வரு கிறேன் என்று சொல்லும்போது எப்படி வராதே என்று சொல்வது?"

"சரி, வேறெங்காவது தங்கட்டும். இங்கே தங்க வேண்டாம் என்று சொல்லி விடு."

"அதெப்படி? வருவது என் அம்மாவும் என் அக்காவும். என் வீட்டில் தங்காமல் வேறெங்கே தங்குவார்கள்?" என்றாள் பேஜ் கோபமாக. உதவியாக ஒரு துரும்பு எடுத்துப் போடாமல், ஆறுதலாக ஒரு வார்த்தை சொல்லாமல், அதி காரம் மட்டும் பண்ணுகிற கணவனைப் பார்த்து ஆத்திரம் பொங்கியது.

"ஏன், அவர்கள் இங்கே தங்கினால் உங் களுடைய அந்தரங்க வாழ்க்கைக்குக் குந்தக மாக இருக்குமா? உங்கள் குட்டு உடைந்து விடு மென்று பயப்படுகிறீர்களா?" என்று காரிலைக் கேட்டாள்.

அவனால் அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியவில்லை. நீண்ட நேரம் மௌனமாக இருந்தவன், "இப்படியே நாம் அதிக நாள் ஓட்ட முடியாது. சீக்கிரம் ஒரு வழக்கறிஞரைப் பார்க்க வேண்டியதுதான்," என்று சொல்லிவிட்டுப் படுத்துக் கொண் டான்.

மறுநாள் காலை அவள் கண்விழித்தபோது பிராட் வீட்டில் இல்லை. ஒரு சீட்டு மட்டுமே இருந்தது. கால்ஃப் விளையாடப் போவதாயும், ராத்திரி வரவில்லை என்றும் எழுதி வைத் திருந்தான்.

(தொடரும்)

# பட்டொளிப் பரவசம்!





ஒளியும் ஒலியும் ஒருங்கிணைந்த தீபாவளித் திருநாளைக் கொண்டாட
புத்தம்புதிய ரகங்களில் பட்டுச் சேலைகள்.
மேலும் பருத்தி மற்றும் பாலியெஸ்டர் சேலைகள்...
வேட்டிகள், துண்டுகள், படுக்கை விரிப்புகள், தலையணை உறைகள்,
டவல்கள், திரைச்சீலைகள் மற்றும் பச்சிளம்சிசுக்களுக்கான துணிவகைகள்.
அளிப்பது கோ-ஆப்டெக்ஸ். கொண்டாடுவது நீங்கள்!




தமிழக அரசுப் பணியாளர்களுக்கு ஒரு மாத அடிப்படைச் சம்பளம் மற்றும் அகவிலைப்படி வரை வட்டியில்லாக் கடன் வசதி உண்டு. பொது நிறுவனங்கள், வங்கிகள், பள்ளிகள், கல்லூரிகள் மற்றும் தனியார் நிறுவனங்களில் பணிபுரிபவர்களுக்கும் சுலபத் தவணையில் வட்டியில்லாக் கடன் வசதி உண்டு.

* அனைத்து கைத்தறி ரகங்களுக்கும் 20% ; குறிப்பிட்ட ரகங்களுக்கு 30% முதல் 40% வரை.

தீபாவளி வரை ஞாயிறு மற்றும் விடுமுறை நாட்களிலும் விற்பனை உண்டு

Visit us on the Internet at
http://www.bestindia.com/cooptex/



கோ-ஆப்டெக்ஸ்
தமிழ்நாடு கைத்தறி

எண்ணற்ற ரகங்கள், எல்லையில்லா குதூகலம்!

DIPR/889/DIS/97/CA.






1997 அக்டோபர் 19
ஈசுவர ஐப்பசி 2
மலர் : 56
இதழ் : 12

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## தேயிலையுடன் வளரும் தீவிரவாதம்!

அஸ்ஸாமின் அடர்ந்த தேயிலை தோட்டப் புதர்களுக்கிடையே பதுங்கிப் பதுங்கி பயங்கரவாதமும் கடந்த பத்தாண்டுகளில் செழித்து வளர்ந்திருக்கிறது. மத்திய அரசும், அடுத்தடுத்து அஸ்ஸாமில் பதவி வகித்த மாநில அரசுகளும் இதை அறியாமலில்லை.

ஆனால், சமீபத்தில் இந்தப் பிரச்னைக்கு ஒரு புதிய பரிமாணம் அளிக்கப்பட்டிருக்கிறது. அஸ்ஸாமில் செயல்படும் தனியார் தேயிலை கம்பெனிகள் - குறிப்பாக டாடா டீ நிறுவனம் பலிகடாவாக்கப்பட்டிருக்கிறது.

பிரணதி தேகா என்ற பெண் தீவிரவாதி உல்ஃபா (United Liberation Front of Assam) அமைப்பைச் சேர்ந்தவர். இவருடைய பிரசவ கால அவசர சிகிச்சைக்கான செலவையும் விமான போக்குவரத்துச் செலவையும் டாடா டீ நிறுவனம் ஏற்றதாகக் கண்டுபிடித்தனர் அஸ்ஸாம் காவல் துறையினர். உடனடியாக டாடா டீ அதிகாரி விசாரணைக்குட்படுத்தப்பட்டு ரிமாண்டில் வைக்கப்பட்டார்!

'பிரணதி தேகாவுக்கு உதவி அளிக்கப்பட்டது மனிதாபிமான அடிப்படையில்தான். டாடா நிறுவனத்தில் இதைப் போன்ற சமுதாயப் பணிகளுக்குத் தனி நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. அதைக் கொண்டு, காசோலை மூலமே மருத்துவமனைக்குக் கட்டணம் தந்திருக்கிறோம். தேகாவுக்குத் தேவைப்பட்ட மருத்துவ உதவி உள்ளூரில் இல்லாததால் அவர் பம்பாய் செல்வதற்கான விமான செலவையும் ஏற்றோம். தீவிரவாதத்தை ஆதரிக்க விரும்பினால்




பகிரங்கமாகக் காசோலை மூலம் இப்படி உதவி செய்வோமா?' என்று டாடா நிறுவனம் தரப்பில் கேட்கிறார்கள்.

'விஷயம் அவ்வளவு எளிமையானது அல்ல; தீவிரவாதிகளுக்கு டாடா நிறுவனம் அளித்து வரும் ஆதரவின் ஒரு அம்சம்தான் இது. பெருந்தொகைகள் கப்பமாகச் செலுத்தப் பட்டிருக்கின்றன' என்று அரசுத் தரப்பில் உறுதியாகச் சொல்கிறார்கள்.

அதற்கு ஆதாரம் சேர்ப்பதற்காக, அஸ்ஸாமில் செயல்படும் பல நிறுவனங்களின் அதிபர்களிடையே நடந்த டெலிபோன் உரையாடல்கள் ஒட்டுக் கேட்கப்பட்டிருக்கின்றன! அந்த உரையாடல்களைப் பத்திரிகைகளுக்கும் கிடைக்கச் செய்திருக்கிறார்கள்.

இதையெல்லாம் நோக்க, டாடா நிறுவனத்தின் பேரில் கரும்புள்ளி குத்துவதில் அஸ்ஸாம் அரசு குறியாக இருப்பதாகவே தோன்றுகிறது.

தீவிரவாதிகளுக்கு ஆதரவு அளிப்பது தேச விரோதக் குற்றம் என்பதில் துளியும் சந்தேகமில்லை. ஆனால், தீவிரவாதமே வாழ்க்கை முறை என்று ஆகிவிட்ட ஒரு சூழலில், மக்களும் சரி, தொழில் நடத்த வேண்டிய கட்டாயத்தில் இருக்கும் நிறுவனங்களும் சரி, அந்தத் தீவிரவாத சக்திகளுக்குப் பணிய வேண்டியதாகி விடுகிறது.

அஸ்ஸாம்வாசிகள் மத்திய, மாநில அரசுகளுக்கு வரி செலுத்துவது போதாதென்று உல்ஃபாவுக்கும் கட்டாய 'வரி' செலுத்தி வருகிறார்கள் என்பது கசப்பான உண்மை.

இந்தியாவின் மொத்த தேயிலையில் பாதிக்கு மேல் இந்தக் குட்டி மாநிலத்தில்தான் உற்பத்தியாகிறது. எனவே, இங்கு தேயிலை கம்பெனிகளுக்கு முக்கியமான இடம் உண்டு. அந்த நிறுவனங்கள் எல்லாமே தீவிரவாதிகளுக்குக் 'கப்பம் கட்ட' கட்டாயப் படுத்தப் பட்டிருக்கின்றன. பணியாவிட்டால் உயிருக்கும் தொழில் - வர்த்தகத்துக்கும் ஆபத்து; கோடிக் கணக்கில் நஷ்டம்! வேறு வழியின்றி எல்லா நிறுவனங்களும் தீவிரவாதத்துக்குப் பணிந்து




திறை செலுத்தி வந்திருக்கின்றன. இந்த வற்புறுத்தலை ஓரளவு எதிர்த்து, மறுப்புக் கூறும் துணிவு, அவற்றுள் பெரிய நிறுவனமான டாடா டீ நிறுவனத்துக்கு மட்டுமே இருந்திருக்கிறது. இதைத் தீவிரவாதிகளே பத்திரிகை பேட்டியில் தெரிவித்திருக்கிறார்கள்!

ஆனால், அஸாம் முதல்வர் மஹந்தா, டாடா டீ நிறுவனத்தின் பேரில் தமது முழு கோபத்தையும் திருப்பியிருக்கிறார். சட்டம் தன் கடமையைச் செய்யும் என்று சூளுரைத் திருக்கிறார்.

இதில் வேடிக்கை என்னவென்றால், மஹந்தாவின் ஆட்சியில் தீவிரவாதத்தைக் கட்டுப் படுத்த முடியவில்லை என்று காரணம் காட்டித்தான் காங்கிரஸ் அஸாமில் ஆட்சிக்கு வந் தது! கடந்த பொதுத் தேர்தலின்போது, அஸாம் மக்கள் மீண்டும் மஹந்தாவின் அஸாம் கண பரிஷத்துக்கு வாய்ப்பளிக்க முடிவு செய்து விட்டார்கள். அந்தத் தேர்தலுக்காக மஹந்தா, டாடா டீ நிறுவனத்திடம் பண உதவி கேட்டு மறுக்கப்பட்டதாகவும் அதன் விளைவாகவே இப்போது பழி தீர்க்க முற்படுவதாகவும்கூடப் பேச்சு அடிபடுகிறது.

இந்த அரசியல் சுயநலங்களுக்கும் தனிப்பட்ட காழ்ப்புணர்ச்சிக்கும் இடையே, அஸ்ஸாமில் தீவிரவாதம் தேயிலையைக் காட்டிலும் அடர்த்தியாக வளர்ந்துவிட்டது. உல்ஃபா தீவிரவாதிகள் உலகெங்கிலுமிருந்து நவீன ஆயுதங்களை இறக்குமதி செய்கிறார்கள். அவற்றைக் கொண்டு அச்சுறுத்தி மக்களையும் தேயிலை நிறுவனங்களையும் பணிய வைக்கிறார்கள்.

மத்திய, மாநில அரசுகள் தீவிரவாதத்தை ஒடுக்கவோ, பேச்சுவார்த்தை மூலம் பிரச்னைக்குத் தீர்வு காணவோ எந்தவித முயற்சியும் செய்யவில்லை. முதல்வர் பலி கடாக்களைத் தேடுகிறார். பிரதமரோ பிரச்னையின் திக்கில்கூட தலை வைத்துப் படுக்காமல் நாடு நாடாகப் பறந்து கொண்டிருக்கிறார்!

# வட்டமேஜை

 இரண்டு தலையங்கங்களும், மூன்று கார்ட்டூன்களும், காலமறிந்து நாட்டு நடப்புக் கேற்றபடி, வாசகர்களின் சிந்தனையைத் தூண்டுவதாக இருந்தது. பாஸ்வானையும், கல்யாண்சிங்கையும் ஒரு குட்டி குட்டி, குஜ்ராலை மனமாரப் பாராட்டிய 'கல்கி' தான் ஒரு பாரபட்சமற்ற பத்திரிகை என நிரூபித்துள்ளது.
பெங்களூர்-16, அ. சங்கரன்.

 'குடை இல்லாமல் வை.கோ என்ன செய்வார்?' என்ற வாசகரின் கேள்விக்கு, 'அதான் ஏற்கெனவே இரட்டை இலை நிழலில் ஒதுங்கி விட்டாரே...!' என்று நீர் கூறியிருக்கும் பதில் சரியான சாட்டையடி...!
சூரனூர், எஸ். காளிதாஸ்.

 'சூப்பர் டைரக்டர் மணிரத்னமா இல்லை ஷங்கரா?' மோதல், பட்டிமன்றம் போல் இருந்தாலும், இருவரும் வேறு வேறு பாணியில் தனித்துவம் பெற்ற மகத்தான இயக்குனர்கள்தான் என்பதில் ஐயமில்லை.
மேலகிருஷ்ணன்புதூர். பிரபாலிங்கேஷ்.

 கை கொடுக்குமா கிருஷ்ணா? 'கவர் ஸ்டோரி' படித்தேன். சென்னை நகர மக்கள் குடிநீருக்காகப் படும் அவஸ்தையைப் படித்தபோது நெஞ்சம் கனத்தது.
திருச்சி - 18,
அம்மனூர் எம். சாம்பமூர்த்தி.

 'கை கொடுக்குமா கிருஷ்ணா?' கட்டுரை ஏற்படுத்திய டென்ஷன், பெட்டிச் செய்தியில் இடம் பெற்றிருந்த 'ஆற்காட்டார் மனம் வைப்பாரா? அல்லது எப்போதும் ஆற்காட்டாருக்கு பக்கத்திலேயே இருக்கிற முதல்வராவது தகுந்த நடவடிக்கை எடுக்க உதவுவாரா?' என்ற நக்கலான வரியைப் படித்ததும் ஏற்பட்ட குபீர் சிரிப்பால் சற்றே ரிலாக்ஸ் ஆனது!
திருப்பூர், ப. சங்கர்.

 "இருபதாம் நூற்றாண்டில் இப்படியொரு குடும்பமா? ஆச்சர்யத்தால் மெய் மறந்து வாய் பிளக்கச் செய்து விட்டார் பாலசுப்பிரமணியன். நகர மக்கள் எல்லோருமே இவர்களைப் பின்பற்ற ஆரம்பித்தால் போதும்! நகரத்தின் நரக வாழ்க்கை சொர்க்கமாகி விடும். இம்மாதிரி உள்ளங்களை அரசும் ஊக்குவிக்க வேண்டும்!
மதுரை, நெல்லை வி. சிவா.

 வாழ்க்கையில் விரக்தியுற்று முகாரி ராகம் பாடிக் கொண்டு மூலையில் முடங்காமல், புதிய பூபாளமாய் வீதிகளில் வலம் வரும் ஆட்டோ பெண்மணிகளுக்குப் பாராட்டுக்கள். பெண்கள் அழகுப் பதுமைகளும், அழுது தீர்க்கும் அபலைகளுமல்ல; அதிரடி ஆரணங்குகள் என்பதை நிரூபித்து வரும் 'நண்பன்' அமைப்பிற்கு வாழ்த்துக்கள்.
நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

 மூட்டு வலி பற்றிய கேள்விகளுக்கு, டாக்டரின் பதில்கள் மிக மிகப் பயனுள்ளதாக இருந்தது. மருத்துவ கேள்வி பதில்கள் தொடர்ந்து வெளி வந்தால் சிறப்பு.
மேலப்பாதி, என். ராஜி.

 எந்தத் தொழில் செய்தாலும் கௌரவக் குறைச்சல் இல்லை. செய்யும் தொழிலே தெய்வம் என்னும் உயரிய கருத்தை, ஆணித்தரமாகக் கூறிய அருமையான சிறுகதை 'இலை பொறுக்கி'.
திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

 கிரிக்கெட் விளையாட்டில் நம் ஆட்டக்காரர்கள் 'ஷைன்' பண்ணுகிறார்களோ இல்லையோ, தொடர்ந்து விளம்பர ஒப்பந்தங்களில் 'sign' பண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்பது அவர்களுடைய விளம்பர வருமானத்தை கல்கி வெளியிட்டதிலிருந்து தெரிகிறது.
நாகூர், ஏ. காதர்.

 "எப்போது கேட்பது" கவிதை பெண்களின் உள்ளத்தில் உறங்கிக் கிடக்கும் ஊமை உணர்வுகளை பலமாக எதிரொலித்தது!
நீலம்பூர், ஏ.எஸ். இராமசாமி.

 மேலாண்மை பொன்னுச்சாமி எழுதிய - 'மனமாயை' சிறுகதை கிராமத்துக் கைம் பெண்ணின் ஆழமான மன உள்ளுணர்வைப் புலப்படுத்தியது... கதை படிக்கிறோம் என்ற எண்ணமே இல்லாது மனமொன்றிய லயிப்புடன்... கண்ணீருடன் படித்து முடிக்க நேரிட்டது... பாராட்டுக்கள்!
வலையபட்டி, எம். பாலசுப்பிரமணியன்.



வட்டமேஜை

'மின்சாரக் கனவு' காஜோல், 'இருவர்' ஐஸ்வர்யா ராய், 'வி.ஐ.பி' ரம்பா, 'நேருக்கு நேர்' சிம்ரன்–

இவர்கள் நாலு பேருக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. அது என்ன? என்று சாடிலைட் சானல் சினிமா க்விஸ்களில் கேட்கப்படுவது போல கேள்வி கேட்டால் சட்டென்று பதில் சொல்லுவது கஷ்டம்தான். அப்படியே தப்பித் தவறி சரியாய் பதில் சொன்னாலும். அரை கிலோ வெள்ளி பரிசு தர சாத்தியமில்லை.

கேள்விக்குச் சரியான விடை:

இந்த நாலு பேருக்கும் படத்தில் காஸ்டியூம் டிசைனர் ஒருவர் தான். பெயர் ப்ரியா பாலு.

அடுத்த கேள்வி: ப்ரியா பாலு சிறு குறிப்பு வரைக.

இதற்கும் சரியான விடை சொன்னால், பித்தளை ஸ்பூன்கூடப் பரிசு கிடையாது என்பதை நினைவிற் கொள்க)

ப்ரியா பாலு ஏ.வி.எம். செட்டியாரின் பேத்தி. ஏவி.எம். பாலசுப்ரமணியத்தின் மகள். இவர் காஸ்டியூம் டிசைனராகப் பணியாற்றிய முதல் படம் ஏவிஎம்மின் பொன்விழா ஆண்டுத் தயாரிப்பான மின்சாரக் கனவு. ஏவி.எம். குடும்பத்திலிருந்து சினிமாவுக்கு வந்திருக்கும் முதல் பெண் இவர்!

• வி.ஐ.பி. சிம்ரான்

# கேரக்டருக்கு ஏற்ப காஸ்ட்யூம்!



**கேள்வி: ப்ரியாவுக்கு காஸ்டியூம் டிசைனிங்கில் ஆர்வம் எப்படி ஏற்பட்டது?**

பதில்: அவருக்கு சிறுவயது முதலே துணி மணிகள் மீது கொள்ளை பிரியம். ஸ்டெல்லா வில் எகனாமிக்ஸ் படித்த கையோடு, அமெரிக்கா போய் எம்பிஏ படித்து விட்டு, பாங்க் அல்லது மல்டி நேஷனல் கம்பெனி ஏதாவது ஒன்றில் செட்டில் ஆக நினைத்தவரை, விதி தடுத்து, சிங்கப்பூரில் ஃபேஷன் டிசைனிங் படிக்க வைத்தது.

**கேள்வி: அக்காரா என்பது என்ன?**

பதில்: சமஸ்கிருதத்தில் அக்காரா என்றால் பொக்கிஷப் பெட்டகம் என்று அர்த்தம். அந்தப் பெயரில் ப்ரியாவின் அம்மா லலிதா பாலசுப்ரமணியம், 'பொட்டிக்' ஒன்று நடத்தி வருகிறார். முதலில் நாகரிக உடைகளின் விற்பனை நிலையமாக மட்டுமே இருந்தது அது. ஆனால் இப்போது ப்ரியா பாலுவின் கைவண்ணத்தில், வண்ணத்தில், வண்ணக் கற்பனையில் உருவான புதுப்புது டிசைன்களில் சல்வார் - கம்மீஸ் வகையறாக்கள் அமோகமாக வடிவமைக்கப்பட்டு, விற்பனை செய்யப்படுகின்றன. விலை எழுநூறு முதல் ஏழாயிரம் வரை.

**கேள்வி: ப்ரியா சினிமா காஸ்டியூமர் (டிசைனர்) ஆனது எப்படி?**

ப்ரியா: "நான் பேஷன் டெக்னாலஜி படித்தவள்; டிசைனிங்கில் ஆர்வம் கொண்டவள் என்பதை அறிந்த மின்சாரக் கனவு டைரக்டரான ராஜீவ் மேனன், என்னை அந்தப் படத்துக்கு பணியாற்றும்படிக் கேட்டார். நானும் சம்மதித்தேன்.

முதலிலேயே படத்தின் முழு ஸ்கிரிப்ட்டும் எனக்குத் தரப்பட்டது. கேரக்டர்கள் பற்றி டைரக்டருடன் கலந்து பேசினேன். எந்தெந்த லொக்கேஷனில் என்னென்ன காட்சி எடுக்கப்படவுள்ளது? அங்கே என்ன கலர் காம்பினேஷன் என்று கேட்டுத் தெரிந்து கொண்டேன். பின், ஒவ்வொரு கேரக்டருக்கும், காட்சிக்கேற்ப, காஸ்டியூம் வடிவமைத்தேன். மணிரத்னம் கேட்டுக் கொண்டதற்காக இருவர் படத்திலும் சுமார் முப்பது காட்சிகளுக்கு மட்டும் நான் காஸ்ட்டியூம் டிசைன் செய்தேன். குறிப்பாக மோகன்லால், ஐஸ்வர்யா ராய் சம்பந்தப்பட்ட படம் + பாடல் காட்சிகள். விஐபி, நேருக்கு நேர் இரண்டு படங்களிலுமே இரண்டு ஹீரோ, இரண்டு ஹீரோயின் என்பதாலும், பாடல் காட்சிகளுக்கு முக்கியத்துவம் தரப்பட்டதாலும், என் முந்தைய இரண்டு படங்களைப் போலவே சிறப்பாகப் பணியாற்றினேன்."

**"சினிமாவில், பெண்களை முடிந்த அளவு கவர்ச்சிப் பொருளாகவே பயன்படுத்துகிறார்கள். ஒரு பெண் உடை டிசைனர் என்கிற நோக்கில், அப்படிக் கவர்ச்சியாய் உடை வடிவமைக்கிறபோது தர்ம சங்கடமாய் உணர்வீர்களா? உள்ளூர வெறுப்பீர்களா?"**

"அதைப் பற்றி தர்ம சங்கடப்பட மாட்டேன். வெறுப்பதும் என் பணியில்லை. ஏனென்றால், டைரக்டர்தான் கேரக்டர்களையும், காட்சிகளையும் உருவாக்குகிறார். அந்தந்தக் காட்சிகளில், அந்த நடிகையர் ஒப்புக் கொண்டுதானே அப்படி உடையணிகிறார்கள்; நடிக்கிறார்கள்? அதில் நான் ஏன் அநாவசியமாய் என் மூக்கை நுழைக்க வேண்டும்? அதே நேரம், ஒரு குறிப்பிட்ட காட்சியில் ஒரு கேரக்டருக்குப் பொருத்தமில்லாதபடி - அது கவர்ச்சியாக இல்லாது போனாலும்கூட உடை வடிவமைக்கச் சொன்னால், அதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். கேரக்டருக்கு ஏற்றபடிதான் காஸ்டியூம் என்பது தான் என் பாலிஸி."

**"அப்படியெனில், மின்சாரக் கனவு படத்தில் கன்னியாஸ்திரியாக விரும்பும் காஜோலுக்கு ஏன் குட்டை ஃபிராக்?"**

"நீங்கள் படத்தை நுணுக்கமாய் கவனித்திருந்தால் ஒரு விஷயம் புலப்படும். பட்டாம் பூச்சி போல மாணவியாக உள்ள காலத்தில்தான் காஜோலுக்கு குட்டை ஃபிராக். அவள் மனதில் கன்னியாஸ்திரியாகும் எண்ணம் இருப்பது தெரிந்தவுடன் கண்ணியத்துடன், உடைகளில் மாற்றம் தெரியும். அதே போல, பிரபுதேவா மீது அவளையும் அறியாமல் நெருக்கம் ஏற்படும்போது மறுபடி லேசாய் கவர்ச்சி பெறும். ஆக, மறுபடியும் சொல்லுகிறேன். கேரக்டர்களுக்கு ஏற்ப காஸ்டியூம் வடிவமைப்பதுதான் என் பாலிஸி."

சந்திப்பு: **மௌலி**



அடுத்த இதழ்
தீபாவளிச் சிறப்பிதழ்!
பா. ராகவன்
எழுதும்
நிலா வேட்டை
உணர்ச்சிமயமான தொடர்கதை!
நட்சத்திர எழுத்தாளர்களின்
ஒன், டூ, த்ரீ கதைகள்!
சிரிப்பு ஸ்பெஷல்!
அதிக பக்கங்கள்; அதே விலை!

**இந்திய கிரிக்கெட் அணி பற்றி நாளொரு புகார், பொழுதொரு கசமுசா வந்தவண்ணம் உள்ளது. அதைவிட மோசம் – தேர்வு கமிட்டி மீது தலைக்குத் தலை நூறு குற்றச்சாட்டுகள். என்னதான் நடக்கிறது அங்கே? நேற்று வரை எந்தத் தமிழ்ப் பத்திரிகைக்கும் பேட்டி தந்திராத இந்திய கிரிக்கெட் தேர்வுக் கமிட்டியின் தலைவர் ராம காந்த் தேசாய், முதல்முறையாகக் கல்கிக்காகப் பிரத்தியேகப் பேட்டி தரச் சம்மதித்தார். மும்பையில் அவரது இல்லத்தில் பல விஷயங்கள், குற்றச்சாட்டுகள் பற்றி மனம் திறந்து பேசினார். பேட்டியிலிருந்து:**

**“இந்திய அணித் தேர்வு சரியில்லை என்று பரவலாகக் கூறப்படும் குற்றச்சாட்டு குறித்து உங்கள் பதில் என்ன?”**

“நமது அணி, உண்மையிலேயே வலுவான அணிதான். நாங்கள் சரியான வீரர்களையே தேர்வு செய்தோம். கனடாவில் எல்லாருமே நன்றாக ஆடவில்லையா? பத்திரிகைகள்தாம் அணி மோசம். மோசம் என்று எழுதுகின்றன.”

**“திடீரென்று நீங்கள் அணியில் புகுத்திய மொஹந்தியும் ஹர்பீந்தர் சிங்கும் நன்றாகவே பந்து வீசுகிறார்கள். அடிப்படையில் நீங்களும் ஒரு வேகப் பந்து வீச்சாளர் என்பதால் இவர்களை எளிதாக அடையாளம் காண முடிந்ததா?”**

“யெஸ். நீங்கள் சொல்வது உண்மைதான். ஒரு முன்னாள் வேகப்பந்து வீச்சாளன் என்ற முறையில்தான் பெங்களூர் கேம்ப்பில் தேர்வான மொஹந்தியையும் சிங்கையும் கூர்ந்து கவனித்தேன். இருவருமே இள ரத்தம். நான் சொல்லிக் கொடுத்ததற்கு மேலாகவே திறமை காட்டினார் மொஹந்தி. கபில்தேவுக்குப் பிறகு Round arm action - ல் பந்து வீசுபவர் மொஹந்தி மட்டுமே. அவரை எதிர்கொள்வதில் பேட்ஸ்மன்கள் திணற வாய்ப்பு உண்டு என்று தேர்வுக்குழு உறுப்பினர்களிடம் சொன்னேன். அவர்களும் ஏற்றுக் கொண்டார்கள்.”

**“தேர்வுக் கமிட்டியினர் பிராந்திய உணர்வுடன் செயல்படுகிறார்கள் என்ற குற்றச்சாட்டு குறித்து...?”**

“ஒரு வீரரின் திறமையைத் தான் நாங்கள் பார்க்கிறோமே தவிர, அவர் எங்கிருந்து வருகிறார் என்று பார்ப்பதே இல்லை! ஒருசிலர் அப்படிக் குறை கூறுவதைப் பற்றிக்

* கும்ளே



* மொஹந்தி

கவலை கொள்வதுமில்லை. என் தலைமையில் உள்ள இந்த கமிட்டிதான் அபய் குருவில்லா, மொஹந்தி, ஹர்பிந்தர் சிங், ராபின் சிங் என்ற நான்கு வேகப்பந்து வீச்சாளர்களை அறிமுகப்படுத்தியது. அனைவரும் சிறப்பாகத் தானே செயல்படுகிறார்கள்? இதில் பிராந்திய உணர்வு எங்கே வந்தது? கேரளாவிலிருந்து முதல் வீரராக குருவில்லா வந்திருக்கிறார். அதேபோல் மொஹந்தியும் ஒரிஸாவிலிருந்து முதல் தலை. பிராந்திய உணர்வுடன் செயல்பட்டால், இப்படித் திறமைசாலிகளைத் தேடிப் பிடிக்க முடியுமா? பத்து வருஷமாக வெயிட்டிங் லிஸ்டில் இருந்த உங்கள் ஊர் ராபின் சிங்கை எந்த அடிப்படையில் தேர்வு செய்தோம்? திறமை, திறமை மட்டுமே எங்கள் அளவுகோல். இந்த ஒரு விஷயத்தில் நாங்கள் துரியோதனன் கட்சி. கர்ணனை இழந்த பாண்டவர் கட்சி அல்ல!''


• தேசாய்

"ரெஸ்ட் தரும் ஐடியா உண்டா? என்ன செய்யப் போகிறீர்கள்?''

''அவர்களுக்கும் ஓய்வு தேவை என்பது வாஸ்தவம்தான். நிறைய போட்டிகளை ஏற்பாடு செய்யாமல் அவ்வப்போது ஓய்வு தருவதுதான் ஒரே வழி. ஆனால், வெறும் தேர்வுக் குழுவினரான நாங்கள் என்ன செய்ய முடியும்? கிரிக்கெட் போர்டு தான் இவ்விஷயத்தில் அக்கறை கொண்டு இயங்க வேண்டும். மேட்ச்களைக் குறைக்கும் போது ஓய்வு கிடைப்பது மட்டுமின்றி, பயிற்சிக்கும் சமயம் கிடைக்கும். ஆனால், வீரர்களும்கூட 'இத்தனை மேட்ச் வேண்டாம்; குறைத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்ல மாட்டார்கள். பணம் வருகிறதல்லவா? அதுதான் விஷயம்!''

''கங்குலியைப் பந்து வீசச் செய்தது யாருடைய ஐடியா?''

# "நாங்கள் துரியோதனன் கட்சி!"

''இலங்கை தொடரின்போது, பாதியிலேயே மானேஜர் மதன்லால், வீரர்கள் குறித்து கருத்து சொன்னதற்கு எதிர் விளைவு ஏதும் இல்லையே?''

"அது குறித்து ஏதும் பேச வேண்டாம். அது முடிந்து போன விஷயம். எனினும் மதன்லால் அவ்வாறு பேசியது அழகல்ல!''

''கும்ளேவுக்கு என்ன ஆயிற்று? அவரை அணியை விட்டு நீக்கியதன் காரணம் என்ன?''

"தொடர்ச்சியாகப் பந்து வீசியதால் அவருக்கு ஓய்வு தேவைப்பட்டது. அவரால் போதுமான கவனம் செலுத்த முடியாத சூழ்நிலை வந்ததால்தான் தற்காலிக ஓய்வு அளித்தோம். வரப்போகும் ஆஸ்திரேலியத் தொடரில் அவர்தான் நமது Strike bowler. இதில் எந்த சந்தேகமும் வேண்டாம்!''

"தொடர்ச்சியாக ஆடுவதால் போலர்கள் மட்டுமின்றி பேட்ஸ்மென்களுக்கும் சோர்வு வருமே? அவர்களுக்கும் இப்படி

''நானும் டெண்டுல்கரும் பேசிக் கொண்டிருந்தபோது, பாகிஸ்தானுக்கு எதிராக இப்படியொரு புதிய நபரைப் பந்து வீச வைத்தால் பலன் கிடைக்கும் என்று கருதியே கங்கூலியைத் தேர்வு செய்தோம். அது நன்றாகவே வேலை செய்கிறது. ஸ்பின்னரான ஜெயசூர்யா பேட்ஸ்மேனாக சிறக்கவில்லையா? அதுபோல் ஒரு பரீட்சார்த்த முயற்சிதான் இது. எதிர்பார்த்தது போலவே வெற்றி தந்ததில் மகிழ்ச்சி.''

"கடைசியாக ஒரு விஷயம். ஸ்ரீநாத், பிரசாத் இருவருமே அணிக்குத் திரும்பி விட்டால், இப்போதுள்ள புதிய பௌலர்களின் கதி?''

''யார் நன்கு பந்து வீசுகிறார்களோ அவர்கள் அணியில் இருப்பார்கள். ஸ்ரீநாத் என்ன, மொஹந்தி என்ன! திறமை, திறமை மட்டுமே எப்போதும் எங்கள் அளவுகோல்!''

— நந்தினி

# மூன்றாவது கொலை!

கதை: கல்கிதாசன்

படம்: சசி












தபாலில் வந்த கடிதங்களை பங்களாவில் கொடுக்கப் போகிறான் மோகன்.

வாங்க மோகன், இன்னிக்கு உங்களுக்கு இங்கதான் டின்னர்!

எதுக்கு அதெல்லாம்?...

ஏன்? என் கூட சாப்பிடக் கூடாதா?

நோ, நோ! ஸாரி... நான்... சரி, ஓகே!

சமையல் ரெடி! வாங்க!

சாப்பிட்டு ஆனதும் ரத்னா அவனைத் தன் படுக்கை அறைப் பக்கம் அழைத்துப் போனாள். அவன் மிரட்சியுடன் நோக்க—

கமான்! உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு... உன் இளமை, கம்பீரம்... ஐ லவ் யூ!

ஐயோ, இது தப்பு! நான் போறேன்!

வேலையை விட்டேவா? நான் உன்னை விடமாட்டேன்.

அவளிடமிருந்து விடுவித்துக் கொண்டு மோகன் அறையை விட்டு பீதியுடன் வெளியேறியபடி—

முனியன் சொன்னது சரிதான்! நீ காதல் பிசாசு! நான் முதலாளிக்கு துரோகம் பண்ணமாட்டேன்!

நீ என்னை கற்பழிச்சுட்டதா புகார் பண்றேன் பார்!

நீ வெளியே வந்தாத் தானே! இதோ பூட்டிடறேன், கதவை! நாளை முதலாளி வந்ததும் பேசிக்கறேன்!

மறுநாள் வேலையாள் கதவைத் திறந்தபோது—

ஐயா, நீங்களா?

ஆமா! நான் ஊருக்குப் போகலை. இங்கதான் ஒளிஞ்சுக் கிட்டு இருந்தேன். நீ போலீ ஸுக்கு போன் பண்ணு.

கோர்ட்டில் ராமநாதன் ஒப்புதல் வாக்கு மூலம் தந்தார்...

சந்தேகத்துனால முதல் இரண்டு மானேஜரைக் கொன் னேன்.... என்னை முட்டாளாக் கிட்டாளேன்ற ஆத்திரத்துல... மூணாவது கொலை.

மோகன், இளமையா மனைவி வேணும்னு தேடிப் பண்ணிக்கிட்டு... வீண் சந்தேகம். வாழ்க்கைய பாழடிச்சுக்கிட்டேன்... எஸ்டேட் இனி உன் பொறுப்பு!

A UNIT OF
HARI
AGENCIES

# மாமி, அவர் ஆபீஸிலிருந்து வந்ததும் சாவிய அவர்கிட்ட கொடுத்துடுங்க !



போகும் போது எங்க போறேன்னு கேட்கக் கூடாது ... இருந்தாலும்...

நீங்க கேட்கறதுக்கு முன்னாடி நானே சொல்லிடறேன் மாமி ! மயிலாப்பூர் லஸ் கார்னரில் இருக்கும் ஹரிப்பிரியாவுக்குத் தான் போறேன். ஹரிப்பிரியா பெண்களுக்கான பிரத்யேக ஆடை உலகம். அங்கே பெட்டிகோட்ஸ், கரிதார்கள், பேண்மகஸ், பிராக்கள், நைட்மஸ், மாக்ஸிகள், கைக்குட்டைகள் எல்லாம் ஏராளமான வகைகள் தாராளமாக கிடைக்கிறது.



நம்ம பட்ஜெட்டுக்கு தகுந்தாப்ல வாங்கணும்னா ஹரி ஏஜென்ஸியோ. அங்கமான ஹரிப்பிரியா மட்டும் தான் போகணும்.

சித்த நாழி இருக்கியா ? நானும் கதவை பூட்டிண்டு பக்கத்தாத்தில சாவிய கொடுத்துட்டு வந்திடறேன்.




## ஹரிப்பிரியா

பெண்களுக்கான பிரத்யேக
ஆடை உலகம்

111, முதல் மாடி, கச்சேரி சாலை,
சென்னை - 600 004.
போன் : 4942368.

# 16

## வையவன்

# ஏணியாகி நிலவினில் ஆடி...

கண்டன ஊர்வலம் தேரடி மண்டபத்திலிருந்து தொடங்கியது. கடைத் தெரு, காவல் நிலையம், ஆண்ட்ருஸ்பேட்டை வரை போய் நெடுஞ் சாலையில் மீண்டும் திரும்பியது.

கருப்பு பேட்ஜுகள், கைகளில் கண்டன வாசகம் எழுதிய அட்டைகள். வரிசை ஒழுங்கு குலையாமல் தொண்டர்கள் நடந்தார்கள்.

காலடி ஓசைகள். உடைகளின் சரசரப்பு. ஒரு மனம் தோய்ந்த மௌனம்.

யாவுமே நர்மதாவுக்குள் கனத்தன. ஊர் வலத்தில் உடன் நடக்கும்போது தோன்றும் 'த்ரில்' இல்லை. ஆழமான ஒரு சோகம்.

யார் கூப்பிட்டு, எதற்கு வந்திருப்பார்கள் இத்தனை பேரும்?

பள்ளித் தோழர்கள், உறவினர்கள் என்ற பட்டியல் மீறி திருக்கூடலின் தெரிந்த முகங்கள், தெரியாத முகங்கள் என்று ஐநூறு பேருக்கு மேல் திரண்ட கூட்டம் அது.

அவள் அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்தாள். எல்லா முகங்களிலும் ஏறு வெயிலின் தாக்குதல். சிலர் முகத்தில் வியர்வை ஆறு. ஆனால் சலிப்போ, ஒப்புக்கு வருவது போலவோ இல்லை. ஓர் ஈடுபாடு.

முதல் வரிசையில் நடக்கிற தாத்தா அனந்தாச்சாரிக்காக வந்தவர்களா? மீனாட்சியிடம் மீன் வாங்கிய பரிச்சயத்துக்கு வந்தவர்களா?

இல்லை. இது தேச பக்தருக்கோ, மீன்காரிக்கோ வந்த கூட்டம் அல்ல.

சுற்றுச் சூழலின் அபாயச் சீர்கேட்டிற்குப் பலியான இளம் பெண்ணுக்கு வந்ததோ?

இல்லை. இது அதற்கும் மேலே.

உயிர்கள் பிறந்து வளர்ந்து உருவாகி அவற்றின் உள்ளே சூழுறும் சக்தி முழுதும் பீறிட்டு மலர்ந்து வெளிப்படும் முன் பாய்ந்து முறிக்கிற ஒரு விதிக்கு எதிரான கண்டனம் அது.

விதியா?

யார் உருவாக்கியது? இந்த மௌனக் கண்டனம் அதை அசைத்து விடுமா?

யோசித்தவாறே நடந்த நர்மதாவின் கண்களில் ஒரு வேடிக்கை தென்பட்டது.

ஒரு சின்னஞ்சிறு நாய்க்குட்டி. காதில் கறுப்பு. முகத்தில் வெள்ளை. ஊர்வலத்தின் குறுக்கே கடக்க ஐயா முயற்சித்து முயற்சித்துப் பார்க்கிறார்.

முடியவில்லை. இடைவிடாது தொடரும் காலடிகள். ஓசை அடங்கிய மௌனம். அது உற்று உற்று ஒவ்வொரு காலையும் முகத்தையும் பார்த்தது.

கடைசியில் பொறுக்க முடியவில்லை. தன் சின்னத் தொண்டையை எழுப்பிக் குரைத்தது. சிலர் முகத்தில் புன்முறுவல்.

இரண்டு மூன்று நிமிடம் குரைத்து விட்டு நிறுத்தியது. வாலை ஆட்டிக் கொண்டே அதுவும் ஊர்வலத்தோடு நடக்கத் தொடங்கியது.

**ஊ**ர்வலத்தின் முன் வரிசையில் அனந்தாச்சாரி பக்கத்தில் மோகன்ராஜ். மூச் சந்தை மூக்கை ஊர்வலம் தொட்டதுமே மோகன்ராஜ் சிறிது தள்ளாடினான். கால்

வலியா? களைப்பா?

அவன் கையில் பிடித்திருந்த அட்டை தாழ்ந்து சரிந்தது. அவன் கால்மடித்து இடது பக்கமாகச் சரிந்தான். நர்மதா திடுக்கிட்டாள்.

அதே நேரத்தில் முச்சந்தி தள்ளி ஊர்வலம் வந்த எதிர் திசையில் ஒரு ஜீப் நின்றதையும் அவள் கவனித்தாள்.

ஜீப் டிரைவரின் பக்கத்தில் பத்ரி அமர்ந்திருப்பது தெரிந்தது.



"என்ன ஆச்சு? என்ன ஆச்சு?" என்று ஊர்வலத்தின் முன்வரிசை சிறிது குலைந்து மோகன்ராஜைச் சூழ்ந்தது. வேடிக்கை பார்க்கச் சாலையில் நின்றவர்களும் அந்த கும்பலில் வந்து கலந்தனர்.

ஊர்வலத்தின் கட்டுக்கோப்பு குலையக் கூடும்! அதை உணர்ந்த நர்மதா திரும்பி ஊர்வல வரிசையின் முகம் பார்த்து நின்றாள்.

அமைதி.. அமைதி என்று வாய் பொத்திப் பொத்திச் சைகை காட்டி சீர் ஒழுங்கு குலையாமல் கையமர்த்தினாள். மீண்டும் மீண்டும்.

ஊர்வலம் கட்டுப்பட்டது. அவள் முகத்தின் சாந்தமும் உறுதியும் ஒரு மின்விசை போல் அவர்களிடையே நிதானம் காத்தது.

பின்னால் அதற்குப் பின்னால் என்று நின்ற வரிசைகளும் நின்றன.

ஜீப்பிலிருந்து பத்ரி இறங்கி வந்தான். நேரே மோகன்ராஜை நோக்கி நடந்தான். அதற்குள் முன் வரிசையில் நின்ற நாலு பேர் மோகன்ராஜைக் கையும் காலும் பிடித்துத் தூக்கி சாலை கடந்தனர்.

சாலைச் சந்திப்பில் இருந்த துணிக் கடை பெஞ்சுக்குத் தூக்கிச் சென்றனர். அங்கே உட்கார்ந்திருந்தவர்கள் எழுந்து இடம் ஒதுக்கினர்.

"எதிர் வெயிலு. பாவம் தாங்க முடியலே."

சாலையோரக் கடைக்காரர்கள் பேசிக் கொண்டது கேட்டது.



''காதலிச்சுத்தான் கல்யாணம் பண்ணிக் கணும்னு இல்லே; கல்யாணத்துக்குப் பிறகும் காதல் மலர்வதுண்டுன்னு சொன்னதை அவன் தப்பாப் புரிஞ்சுக்கிட்டிருக்கான்னு நினைக் கிறேன்.''

''எப்படிச் சொல்றே?''

''கலாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு, இப்ப ரமாவைக் காதலிச்சுக்கிட்டு இருக்கான்!''

– வெ. ராஜாராமன்



''மடத்துக்கு சாம்பிராணி வாங்க இங்கேயிருக்கும் இருபது சீடர்களில் என்னையே ஏன் குருவே எப்போதும் போகச் சொல்றீங்க?''

– உ. ராஜாஜி



**அபூர்வ பெயிண்ட்!**

**பெ**யிண்டுகளிலேயே அபூர்வ மானது வெற்றி..! அசிங்கங்களையும் அவலங்களையும் நொடியில் மூடி மறைத்து விடும்!

நன்றி: விஸ்டம்
தகவல்: ராஜிராதா

மோகன்ராஜை பெஞ்சின் மேல் படுக்க வைத்தனர். யாரோ ஒருவர் சோடா உடைத் தார். ஒரு கை ஊற்றி அவன் முகத்தில் சள் ளென்று தெளித்தார். மீதத்தை ஒரு கிளாஸில் ஊற்றி அவனுக்குப் பருகக் கொடுத்தார்.

சற்றைக்கெல்லாம் முன்வரிசை சீர்பட்டு விட்டது. சலசலப்பு குறைந்தது. அனந்தாச்சாரி கைகளை உயர்த்தி சமிக்ஞை செய்து கொண் டிருந்தார்.

ஊர்வலம் பெஞ்சின் மீது படுத்திருக்கும் மோகன்ராஜை விட்டு நகரத் தொடங்கிற்று.

மெதுவாக நகர்ந்த பெண்கள் அணியின் முன் வரிசையில் நின்ற நர்மதா, ஜீப்பை விட்டு பத்ரி இறங்குவதைக் கவனித்தாள்.

அவன் திரும்பி, ஜீப் டிரைவரைக் கை காட்டி அழைத்ததும், அவன் நெருங்கி வந் ததும் சற்று தூரத்தில் பெஞ்சில் படுத்திருந்த மோகன்ராஜைக் காட்டி எதுவோ சொன் னதும், அந்த டிரைவர் மோகன்ராஜை நோக்கி நடக்கத் தொடங்கியதும் ஒரு மௌனப் படம் போல் அவள் கண்களில் பட்டன.

அடுத்து ஓர் ஆச்சரியம் நிகழ்ந்தது.

ஜீப்பையும் டிரைவரையும் விட்டு விட்டு ஆண்கள் வரிசையில் கடைசி நபராகச் சேர்ந்து கொள்ள பத்ரி நடந்து வந்தான்.

நர்மதாவின் புருவங்கள் விரிந்தன. உயர்ந்தன.

அவள் முகத்தை அவன் பார்வை சந்தித்தது.

'நீங்களும் கலந்து கொள்கிறீர்களா?' என்று ஒரு மௌனக் கேள்வி அவள் விழிகளில்.

அவன் கண்ணிமைகளை மூடி லேசாகத் தலை உலுக்கினான். ஆமோதிப்பது போல.

இதற்கு என்ன அர்த்தம்?

அவள் யோசித்தவாறே பின் தொடர்ந் தாள். ஊர்வலம் மெதுவாய் நகர்ந்தது.

ஊரோடு ஒத்துப் போக விரும்பும் அனு சரணையா? அனுதாபமா? இல்லை, தானும் ஒருவகையில் பாதிக்கப்பட்ட சுய வருத்தமா? அல்லது தன்னைக் கவர நினைக்கும் முயற்சியா?

'சீ, இதென்ன புத்தி? சிறுமையையே சிந்திக் கும் புத்தி!' அவள் தன்னையே கடிந்து கொண் டாள். எதற்கெடுத்தாலும் குறை காண்பது, எதிலுமே உள்நோக்கம் கற்பிப்பது?

எங்கிருந்து வந்தது இந்த மனப்போக்கு?

அப்பா? ஊஹூம்... சேச்சே! அவர் சமர்ப்பண சரணாகதி.

தாத்தா? ஐயையோ அவர் கர்மஞானி.

அம்மா? அவளிடமிருந்தா?

அத்தனை ஆண்களும் அயோக்கியர்கள். ஒவ்வொருவனும் மாமிச பட்சிணி. பெண் தாகத்தில் அலைபவன். ஒவ்வொருவனையும் டெலஸ்கோப்பிலும் மைக்ராஸ்கோப்பிலும் கூர்ந்து கவனி. நம்பி மோசம் போகாதே.

ஆண் ஒவ்வொருவனும் வக்ரங்களைச் சுமக்கும் அழுக்கு மூட்டை. உஷார். உஷார்.

இப்படி ஒரு சிந்தனைக்குணம்.

தொண்டு நிறுவனத்தின் துயர்க்கதைகள், வைஷ்ணவா கல்லூரியின் சக தோழிகள். ஏன் சுற்றிச் சுற்றி நச்சரிக்கும் சமூகம்.

இப்படி எல்லாம் கலந்து அந்த கலவை வடிகட்டிய சசடு இது.

இதை நீடிக்க விடுவது தவறு. இது இறுகி விடும். வைரம் பாயும். அறுக்கும். பகைமை கக்கித் தனியே ஒதுக்கி ஆங்காரம் வருவிக்கும். அவன் அதை உதறினான்.

எதிரே ஒரு டெலிபோன் கம்பம். அதன் மீதிருந்து அபூர்வமான ஒரு பச்சையில் கிளி எழுந்து பறந்ததைக் கவனித்தாள். அதைத் தொடர்ந்து ஓர் இணைக்கிளி. அதுவும் முன்னதைப் பின் தொடர்ந்தது.

ஏனோ பாரதி பாடல் நினைவு வந்தது.

மீனாட்சியின் பழைய கடிதத்தில் படித்த பாட்டு.

எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி...

எப்படி வந்து விழுந்த வரி அது!

ஆண் பெண் என்ற இயற்கை சக்திகள் இருக்க வேண்டிய நியதியை... ம்ஹூம்! இருந்த நியதியைக்கூட இருந்து பார்த்த மாதிரி ஒரு தரிசனக் காட்சி.

மகிழ்ந்து குலாவி!

ஊர்வலத்தில் மேலும் நடக்கும்போது கண்டனம், மீனாட்சி, பத்ரி, தான் என்ற எல்லாம் சுத்தமாய் மறந்த ஒரு கவிதானுபவம். அது அவனை மேலுயர்த்தியது. ஈதர் வெளியில் மனசைப் பஞ்சுப் பொதி போல் விரிய விரிய மிதக்க விட்டது. மனவெளியில் அந்த சங்கீதம் நாத அனுபவமாகி திளைக்க அவன் கால்கள் மட்டும் நடந்தன.

**ஊ**ர்வலம் பன்னிரண்டு மணிக்கு முடிந்தது நல்ல உச்சி வெயில். இவ்வளவு தூரம் இவ்வளவு நேரம் சமீபத்தில் நர்மதா நடந்ததில்லை.

இடுப்பும் தொடைகளும் விண் விண்ணென்று துடித்தன. உள்ளங்கால்வலி. களைப்பு. லேசாகக் கண் இருண்டது. வீடு திரும்பியதும் நேரே போய் கட்டிலில் விழுந்தாள். மரக்கட்டை போல் தூங்கிப் போனாள்.

எழுந்திருக்கும்போது மாலை மணி மூன்று.

"அலைஞ்சுட்டு வந்திருக்கா, எழுப்ப வேண்டாம்னு ஒங்க தாத்தா சொன்னார். மொதல்லே கொஞ்சம் சாப்டுக்கோ... ரொம்ப அசதியா இருந்தா இன்னொருக்கா படுத்துண்டு ரெஸ்ட் எடுப்பே."

மஹாலக்ஷ்மி அழைத்தாள். அப்போதுதான் பசி தெரிந்தது.

முகம் அலம்பி சாப்பிட உட்காரும்போது மோகன்ராஜ் நினைவு. அவன் என்ன ஆனான்? தாத்தா?

"தாத்தா எங்கேம்மா?"

"சாப்பிட்டுட்டு கொஞ்ச நாழி படுத்திண்டிருந்தார். யாரோ ஒர்த்தன் ஆட்டோவிலே வந்து கூட்டிண்டு போனான்."

"எங்கே போறேன்னு சொல்லலியா?"

"அது என்னிக்கு நடந்திருக்கு?"

**இ**ரவு எட்டரை மணிக்கு அனந்தாச்சாரி வீடு திரும்பினார். முகத்திலும் நடையிலும் அதிகம் அலைந்த ஆயாசம்.

என்ன நடந்தது என்று அறிகிற பரபரப்பு. ஆனால் நர்மதா கேட்கவில்லை.



**எ**தை ஏற்றுமதி செய்வது? சாமர்த்தியம் இருந்தால் பூசணிக்காய்களைக் கூட ஏற்றுமதி செய்து பொருளீட்டலாம்! நாட்டுக்கு மிக அவசியமான அந்நியச் செலாவணி சம்பாதித்துத் தரலாம்! இதனை நிரூபிப்பது பசிபிக் கடலில் உள்ள ஒரு சின்னஞ்சிறு தீவு. டோங்கா என்ற இந்த நாடு, ஆண்டு ஒன்றுக்கு எட்டாயிரம் டன் பூசணிக்காய்களை ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்கிறது.

ஆதாரம்: யுனெஸ்கோ கூரியர்

தகவல்: ஆலன்

கை கால் முகம் அலம்பி ஒரு துண்டில் முகம் துடைத்து கை வைத்த நாற்காலியில் வந்து அமர்ந்தார். தலைக்குப் பின்னே கை கோத்து அவர் கண்கள் மூடின.

"சாதம் பரிமாறட்டுமா?" மஹாலக்ஷ்மி கேட்டாள். நர்மதா அனந்தாச்சாரியைப் பார்த்தாள். லேசாய்க் கண் திறந்தவர் மஹாலக்ஷ்மியைப் பார்த்தார்.

"சித்த நாழியாவட்டும்; கொஞ்சம் தீர்த்தம் குடு."

தம்ளர் தண்ணீர் குடித்து மீண்டும் கண்களை மூடினார்.

தியானமா... சிந்தனையா... வேலையா?

எதுவாயினும் கலைப்பது இங்கிதமில்லை. காத்திருந்தாள்.

மீண்டும் அவர் கண் திறந்தார். நர்மதா

வைப் பார்க்கும்போது முகத்தில் ஒரு கருணை.

"என்ன தாத்தா?"

"ஒண்ணுமில்லே... இந்த மோகன்ராஜ் விவகாரம்தான்."

"ஏன் அவனுக்கென்ன?"

எப்படிச் சொல்வது என்று அவளையே பார்த்தார். பின்பு பெருமூச்சு விட்டார்.

"ஒண்ணும் பெரிசா இல்லே..." இழுத்தார்.

"பெரிசா இல்லேன்னா ஏன் இந்தப் பீடிகை?"

"ம்ஹ்ம். லேசா சித்தப் பிரமை."

"என்னது?" அதிர்ச்சியுற்றாள்.

"பயப்படறாப்பலே இல்லே." மீண்டும் தயங்கினார்.

"சொல்லுங்கோளேன்."

"மயக்கம் போட்டு விழுந்தானே... வெறும் ஸன் ஸ்ட்ரோக் இல்லே... மீனாட்சி மரணத்துக்கு கண்டன ஊர்வலம் வர்ற அதிர்ச்சி... அடி வாங்கி விட்டான். அஞ்சு நிமிஷம் சிரிக்கிறான்... அஞ்சு நிமிஷம் அழறான். என்னென்னமோ பேத்தறான்."

ஒரு பெரிய கொக்கி மனசில் வலித்து இழுத்தது. வலித்தது.

"பத்ரி சாரும் நானுமாத்தான் போய் பாகாயம் மெண்டல் ஹெல்த் சென்டர்லே அட்மிட் பண்ணிட்டு வந்திருக்கோம்."

பத்ரி சாரா? அந்த 'சாரை' அவள் மனசில் குறித்துக் கொண்டாள்.

"இப்ப என்ன ஸ்டேஜ்?"

"ஊசி போட்டு ஸெடேடிவ் குடுத்திருக்கா. மைல்ட் ஷாக்தான். சரியான டைம்லே அழைச்சுண்டு வந்துட்டேன்னு டாக்டர் சொல்றார்... பயமில்லையாம்."

மீனாட்சி... நீ என்னை என்ன செய்தாய்? அவனை என்ன செய்தாய்? ஏனோ மீனாட்சியின் மதிப்பு மனசில் கூடிற்று.

"இதுக்கு இப்படி நீங்க அப்ஸெட் ஆவேன்னு நான் எதிர்பார்க்கவேல்ல தாத்தா."

"அப்ஸெட்டா?... நானா...? நாராயண நாராயண... மனுஷா பாவம் என்னென்ன துக்கத்துக்கு ஆளாகி நலியறான்னு நெனச்சேன்!"

அந்தக் குரலில் மிதந்த கருணை அவள் மனசை இலகு பதமாக்கிற்று.

**ம**றுநாள் காலை நர்மதாவுக்கு கால் தரிக்கவில்லை! வார்டை விசாரித்துத் தெரிந்து கொண்டு மோகன்ராஜைப் பார்க்கத் தனியே புறப்பட்டாள்.

"நானும் வர்றேம்மா," தாத்தா குறுக்கிட்டார்.

"இல்லை. மோகன்ராஜைத் தன்னால் மட்டும், தனியே மட்டும்தான் எதிர்கொள்ள முடியும்.

"வேண்டாம் தாத்தா... களைச்சுப் போயிருக்கேள். நேத்திக்குப் 'புல்' அலைச்சல். நான் போறேன்."

ஏனோ மஹாலக்ஷ்மி அவள் புறப்பட்டதைத் தடுக்கவில்லை. மோகன்ராஜ் அவர்கள் வீட்டுக்குத் தேங்காய் தள்ளுவது, உரித்துத் தருவது, வாழைக்கன்று கொண்டு வருவது என்று எத்தனையோ தொண்டு செய்திருக்கிறான்.

**மெ**ண்டல் ஹெல்த் சென்டரில் கட்டிலில் படுத்திருந்த மோகன்ராஜ் சற்று தெளிவாகி இருந்தான். நர்மதாவைக் கையெடுத்துக் கும்பிட்டான்.

வாங்கிப் போன ஆரஞ்சு ஆப்பிள்களைப் பார்த்துக் கண்ணீர் விட்டான்.

"எனக்காக இவ்வளவு தூரம் வரணுமா சிஸ்டர்?"

உனக்காக மட்டும் இல்லை. மீனாட்சிக்காகவும் என்று மனசுள் சொல்லிக் கொண்டாள். பிரியமாகச் சிரித்தாள்.

ஆறுதல் தேறுதல் அறிவுரை என்று எல்லாம் தவிர்த்தாள்.

'போராட்டம் தற்காலிகமா நின்னிருக்கு உன்னை எதிர்பார்த்து' என்று புன்னகை யோடு நினைவூட்டினாள்.

அது அவனை ஒளியுறச் செய்தது... முகம் தெளிவாயிற்று. கண்களில் உறுதி மீண்டது.

"ஓகே... சிஸ்டர்... இதை விடப் போற தில்லே... நான் விட மாட்டேன்."

அவன் மீண்டு வருவான்! நர்மதா திரும்பும் போது திருப்தியுற்றாள்.

நாலடி நடந்தபோது "நர்மதா" என்று ஒரு குரல். திரும்பினாள். பத்ரி நின்றான்.

(தொடரும்)

---

**"அந்த பத்திரிகை ஆசிரியருக்கும், பழைய பேப்பர் கடைக்காரனுக்கும் தொடர்பு உண்டுன்னு சொன்னபோது நம்ப மாட்டேன்னீங்களே, இப்பப் பாருங்க. அவரோட பத்திரிகையில் என்ன போட்டிருக்கார்னு..?"**

**"அப்படி என்ன போட்டிருக்கார்?"**

**"கதை, கட்டுரை யாவும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அனுப்ப வேண்டிய முகவரி: முனியாண்டி வேஸ்ட் பேப்பர் ஸ்டோர், சென்னை – 111ன்னு போட்டிருக்கார்!"**

**– தூத்துக்குடி சரவணக்குமார்**



தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்

5 கலர் டிவி

இரண்டு நபருக்கு மோட்டார் சைக்கிள்

10 தங்க வளையல்கள் (1பவுன்)

250 மி. லி. கிங் சைஸ் ரூ. 3.16 ஆதாயம் !

10 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 1000/-

25 தங்க லாக்கெட்கள் 1/2 பவுன்

200 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 500/-

400 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 250/-

UJALA FOR SUPER WHITENESS OF CLOTHES

**உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்**

இப்போது உஜாலாவின் டாம்பர் - ப்ரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - ப்ரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்ற நாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமின்ஸ் இல்லாத ஒயிட்னர் உஜாலா-வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மையற்றது. அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.



Write to : **Jyothy Laboratories (UJALA), 2- A, Singarayar Mansion, AbhiramiAvenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.**

# நடக்குமென்பார்

## மேஷம் :



*(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

வீட்டு நிலவரத்தைப் பொறுத்த வரைக்கும் ரொம்ப சுகமான வாரம். குறிப்பா பெண்களுக்கு, மனசுக்குப் பிடிச்சா மாதிரி காரியங்கள் சுமுகமாவே நடக்கும். கணவன் - மனைவி உறவு ரொம்ப ஸ்டிராங்கா ஆகும். ஒரு அண்டர்ஸ்டாண்டிங் இருக்கும். தொழில் செய்யறவங்க, வாரக் கடைசி ரெண்டு நாள் கொஞ்சம் கவனமா இருக்கணும். சில பிரச்னைகள் எட்டிப் பார்க்கலாம். அதே சமயம் சொஸைடில உங்க மதிப்பு கூடும். மொத்தத்துல அதிக சிக்கல் இல்லாத வாரம்.

## ரிஷபம் :



*(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் ்ம் பாதம் வரை)*

வெள்ளிக்கிழமை வரைக்கும் சில சில்லறைப் பிரச்னைகள் அலைக்கழிக்கும். மனசுல ஒரு குழப்பம் இருந்துட்டே இருக்கும். சனிலேருந்து சரியாப் போயிடும். கச்சிதமா எதையும் திட்டமிட்டு நடத்தற உங்களுக்கு உங்க நல்ல மனசே எல்லா உதவியும் செய்யும். பசங்க, படிப்புல கொஞ்சம் கூடுதல் கவனம் செலுத்த வேண்டியது அவசியம். ஷேர் வாங்கற விஷயத்துல மட்டும் யோசனை அவசியம். மத்தபடி பணக்கையிருப்பு திருப்தியாவே இருக்கும். புதுசா நகை நட்டு வாங்கற யோகம் சிலருக்கு இருக்கு.

## மிதுனம் :



*(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உற்சாகமான சமயம். சாதுர்யமான நடவடிக்கைகளால எதிலேயும் வெற்றி உங்களுக்குத்தான். சிலருக்குப் புதுசா வாகனம் வாங்கற யோகம் இருக்குது. வெளியூர் போற ராசியும் உண்டு. அலைச்சல் காரணமா கொஞ்சம் உடல் நலன் பாதிக்கலாம். பெண்களுக்கு, தாய் வீட்டுலேருந்து ஏதாச்சும் நல்லது நடக்கலாம். லாட்டரி, ரேஸ் பக்கம் போகாதீர்கள். தோல்வி நிச்சயம்!

## கடகம் :



*(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

இசை, சினிமா, எழுத்து இந்த மாதிரி கலை சம்பந்தமான துறைல இருக்கறவங்களுக்கு நல்ல காலம் கூடி வருது. புதிய வாய்ப்புகள், நல்ல புகழ், வருமானம்னு ஓஹோன்னு இருப்பீங்க. திருமணம் தள்ளிப் போயிட்டிருக்கற பெண்களில் சிலருக்கு இந்த வாரம் அந்த யோகம் கைகூடும். வீட்டுல சின்னச்சின்ன பிரச்னைகள் இருக்கலாம். எதையும் பெரிசு பண்ணாம சுலபமா எடுத்துக் கிட்டீங்கன்னா நிம்மதி குறையாது. எதிலும் வாக்குவாதம் பண்ணாதீங்க. சைலண்டா இருங்க. இந்த வாரம் முடிஞ்சப்பவெல்லாம் கோவிலுக்குப் போயிட்டு வாங்க. மனசு லேசாயிடும்.

## சிம்மம் :



*(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

புருஷன் பொஞ்சாதிக்குள்ள லேசா ஊடல் வர்ற டைம் சார்! பார்த்து நடந்துக்கங்க. வாரக் கடைசில செலவு வேற கட்டுக்குள்ள இருக்காது. அதனால எப்பவும் ஒருவித எரிச்சல் இருந்துட்டே இருக்கும். நைட்டுல வெளியூர் பிரயாணம் போகாதீங்க. பெண்களுக்குக் கொஞ்சம் உடல் நலக் கோளாறு வரலாம். கவனம்!

## கன்னி :



*(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

எதிர்பாராத ஒரு திருப்பம் காத்துட்டிருக்கு உங்க லைஃப்ல முக்கியமான மாறுதல் ஒண்ணு இந்தவாரம் நடக்கும். காவல் துறை, ராணுவம் மாதிரியான டிப்பார்ட்மெண்டுங்கள்ல இருக்கறவங்களுக்கு நல்ல காலம் இது. மனசுக்குத்

**தனுசு ராசிக்காரரான பட்டிமன்றப் பேச்சாளர் பாரதி பாஸ்கருக்கு இந்த வாரம் உல்லாசமான பீரியட்! வீட்டுக்கு நிறைய விருந்தாளிங்க வரப்போறாங்க. சாதுர்யமான பேச்சாற்றலால் 'எங்கியோ' போகப் போறாங்களாம்!**



தெம்பூட்டக் கூடிய சம்பவங்கள் நடக்கலாம். வாரக் கடைசில வீண் அலைச்சல்கள் இருக்கும். உடம்பு படுத்தும் - வயசானவங்களுக்கு மட்டும்!

### துலாம் :



*(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

இந்த சமூக சேவை மாதிரியான நல்லகாரியங்கள்ல திடீர்னு ஆவல் வரும். அதனால என்ன ஆகும்னா, பரவலா நல்ல பேர், புகழ் கிடைக்கும்! தொழிலதிபர்களுக்கு இந்த வாரம் பிரமாதமா இருக்கும். ஆக்கபூர்வமான சில முடிவுகள் எடுப்பீங்க. அதனோட பலன் உடனடியா தெரியும்! வெளிநாட்டுத் தொடர்புகள் மூலமா சிலருக்குச் சில நன்மைகள் உண்டாகலாம். வீட்டுல, அண்ணன் தம்பிகளுக்கு நடுவுல லேசா சண்டை வரும். உடனே சரியா

# நடக்கும்!

போயிடும்.

### விருச்சிகம் :



*(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

அரசியல்வாதிகளுக்கு ரொம்பப் பிரமாதமான வாரம் இது! பப்ளிக் சப்போர்ட் கூடிவரும். அதே மாதிரி இந்த ராசிக்கார எழுத்தாளர்களுக்கும் நல்ல பலன்கள் உண்டு. நண்பர்களால சில பிரச்னைகள் வரலாம். ஜாக்கிரதையா இருங்க. வீடு, நிலம் வாங்கற முயற்சிகள் நல்லபடியா நிறைவேறும். வார ஆரம்பத்துல கொஞ்சம் பணப் பிரச்னை இருக்கும். வெள்ளிக்கிழமைக்கப்புறம் அதுவும் சரியாயிடும். குழந்தைகள் மூலமா ஏதாச்சும் நல்ல செய்தி கட்டாயம் வரும்!

### தனுசு :



*(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

சமயோசிதமான புத்தியும் சாதுர்யமான பேச்சும் உங்களை எங்கேயோ கொண்டு போகப் போவுது! இந்த வாரம் வீட்டுல விருந்தாளிங்க நிறைய வருவாங்க. உல்லாசமா பொழுது கழியும். வியாபாரிங்களுக்கு மட்டும் சின்னச் சின்ன கஷ்டங்கள், பண நெருக்கடி இருக்கும். ரியல் எஸ்டேட் துறைல இருக்கறவங்களுக்கு லாபம் கூடிவர்ற சமயம் இது. துர்கை வழிபாடு, இந்த வாரம், உங்களுக்குக் கூடுதலா நல்லது செய்யும்.

### மகரம் :



*(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

இது வரைக்கும் இருந்து வந்த பிரச்னைகள் ஒண்ணொண்ணா தீர ஆரம்பிச்சுடும். வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறைவு இருக்காது. லேசா பணத் தட்டுப்பாடு இருந்தாலும் மத்த சந்தோஷங்களினால அது ஒரு பொருட்டா தெரியாது! உடல் நலன் மட்டும் கொஞ்சம் சீரா இருக்காது. மனஸ்தாபங்களைத் தவிர்க்கறது மூலம் பலரோட உதவி கிடைக்கும்! வெளியூர், வெளிநாட்டுப் பிரயாணங்கள் இப்ப வேணாம்.

### கும்பம் :



*(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

தாமதம், அலைச்சல், பண விரயம், மனக் கஷ்டம்! உங்க பிரச்னைகளுக்குத் தீர்வு உங்க கைலதான் இருக்கு. நீங்களே ஏன் சிக்கல்களை உண்டு பண்ணிக்கறீங்க? உங்க பொறுப்புகளைப் பகிர்ந்து கொடுங்க. ஜாலியா கோவில், குளம்னு சுத்துங்க. இந்த வாரம், கூடப் பிறந்தவங்க மூலமா சில நல்லது நடக்கலாம். பெண்களுக்குக் கொஞ்சம் சுமாரான டயம் தான். எதிலும் அவசரப்பட்டு, வார்த்தையைக் கொட்டாதீங்க. பின்னால அள்ள முடியாது. குடும்பத்துல சர்ச்சை உண்டாக நீங்க காரணமா இருக்கக் கூடாது. மௌனம் நல்ல மருந்து.

### மீனம் :



*(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

சின்னச் சின்ன காரியத் தடங்கல்கள் வாரத் தொடக்கத்துல இருக்கும். ஆனா, உங்க ஆற்றல் முழுமையா வெளிப்படற வாரம் இது. எக்ஸ்போர்ட் பிஸினஸ் பண்றவங்களுக்கு ரொம்ப நல்ல நேரம். பணப் பிரச்னை இருக்காது. ஆனா பார்த்து, அளவோட செலவழிக்க வேண்டியது அவசியம். தேவையில்லாம வெளியூர் பிரயாணங்கள் வேணாம். சிறு விபத்துகளுக்கு வாய்ப்பு இருக்கு!

**அக்டோபர் 15 முதல் 21 வரை**

# குறையொன்றுமில்ல

‘எட்டும் எட்டும் எட்டுமாய்’ என்பது மூன்றெட்டு இருபத்திநான்கு - இருபத்தி நான்கு அக்ஷரங்களையுடைய காயத்ரியைக் குறிக்கிறது என்று சொல்லியிருக்கிறேன்.

காயத்ரியே விஷ்ணு என்று வேதம் சொல்கிறது: ‘விஷ்ணுர்வை காயத்ரி’.

‘அந்த காயத்ரியினாலே ப்ரும்ம வர்ச்சஸை சம்பாதித்து, எங்கும் வியாபகனாயிருக்கின்ற எம்பெருமானை நீ காண்பாயாக’ என்கிறது வேதம்.

நித்தியம் பத்து காயத்ரி ஜபிக்கும் ஒருத்தர், அதைச் சொல்லிக் கொள்ள அவசியமேயில்லாமல் அவர் முகமே காட்டிக் கொடுக்கும்.

ஒருத்தர் காயத்ரி ஜபிக்கிறாரா? இல்லையா? என்பதை எதைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்?... அவரது திருமுக மண்டலத்தைப் பார்த்தே தெரிந்து கொள்ளலாம்! காயத்ரி ஜபிப்பவருக்கு, இரு புருவங்களுக்கு மத்தியிலே ஒரு தேஜஸ் இருக்கும். அந்த காயத்ரியை ஜபிக்கக்கூடிய திருமுக மண்டலத்திலே அபரிமிதமான தேஜஸ்! அதற்குத்தான் பிரும்ம வர்ச்சஸ் என்று பெயர்.

ப்ரும்மம் என்றால் காயத்ரி. அந்த காயத்ரியினுடைய வர்ச்சஸ் எங்கே தெரியுமென்றால், அதை ஜபிக்கக்கூடியவரின் நெற்றியிலே. இந்த பிரும்ம வர்ச்சஸ்ஸை மற்றவர்களால் ஏறிட்டுப் பார்க்க முடியாது. ஏனென்றால் அதை ஏறிட்டுப் பார்க்கக் கூடிய சக்தி மற்றவர்களுக்கு - சாமான்யர்களுக்கு இருக்காதாம்.

பரசுராமர் வந்து நின்றபோது யாராலும் அவரை ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. சாமான்யர்களால் பார்க்க முடியாத தோற்றம் என்கிறார் வால்மீகி.

யாரால்தான் பிரும்ம வர்ச்சஸ்களைப் பார்க்க முடியும்...? நித்ய ஜபம், ஹோமம் - இத்யாதிகளைப் பண்ணிக் கொண்டிருக்கும்படியான வசிஷ்டாதி மகரிஷிகளால் பரசுராமரை ஏறிட்டுப் பார்க்க முடிந்ததேயொழிய சாமான்யர்கள் கண் கொண்டு பார்க்க முடியவில்லை.

அந்த தேஜஸைத்தான் பிரும்ம தேஜஸ் என்கிறோம். அது எப்படித் தெரியும் என்பதற்கு இன்னொரு உதாரணமும் சொல்லலாம். ஒரு மகான் - பிரும்ம தேஜஸ் உள்ளவர் எழுந்தருள்கிறபோது, ஒரு சதஸில் (அவையில்) இருக்கும்படியானவர்களெல்லாரும் தங்களையறியாமல் எழுந்து நிற்பார்கள்!

“நான் வருகிறேன்... நீங்கள் எல்லோரும் எழுந்து நில்லுங்கள்...” என்று ஒருத்தர் சொல்லும் வழக்கமுண்டா?...! அப்படிச் சொன்னால் அது லௌகிகத்துக்கு ஒத்துவராது. வருகிறவரைப் பார்த்து, பிறர் தாமாகவே எழுந்திருக்க வேண்டும் - அதுதான் பிரும்ம வர்ச்சஸ்!

பகவான் கிருஷ்ணன் கௌரவர்களிடத்திலே தூது போனான்.

கௌரவர் சபையில் சகுனி, எல்லாரிடமும் என்ன சொல்லிவைத்தான்? “வாசுதேவன் வருவான் இப்போது... அந்நேரம் யாரும் எழுந்திருக்கக் கூடாது!” என்றான்.

எல்லோரும் ஒருத்தரை ஒருத்தர் அமுக்கிப் பிடித்துக் கொண்டு எழுந்திருக்கக் கூடாது என்று அமர்ந்தபடியிருந்தார்கள்.

பகவான் அந்தப் பக்கம் வருகிறான். வழியில் அவனைப் பார்த்த ரிஷிகளுக்கெல்லாம் ஹோமம் பண்ணுகிற செயலானது அப்படியே நின்று போனது. கை, அசையாமல் அப்படியே நிற்கிறது! எப்படி ஹோமம் பண்ணுவதாம்!

விரதம் செய்து கொண்டிருந்தார்கள் சிலர்... அதுவும் நின்று போயிற்று!

ஜபம் செய்து கொண்டிருந்தனர் சில பேர்.. அதுவும் நின்று போனது!

மகான்களுக்கெல்லாமே இந்த நிலை...! எல்லாவற்றையும் விட்டு ஒழித்தவர்கள் அவர்கள்.

சாத்யம் - சாதனம் என்று இரண்டு சொல்வார்கள். சாதனத்தைக் கொண்டு சாத்யம் அடைய வேண்டும். சாத்யம் என்பது உயர்நிலை. சாதனம் என்பது அந்த உயர்நிலையை அடைவிக்கும்படியான கருவி. சாத்யமே கை புகுந்து விட்டால் அப்புறம் சாதனம் எதற்கு...?

ஹோமம் பண்ணிக் கொண்டிருப்பவர்கள், எதற்காக அந்த ஹோமம் பண்ணுகிறார்கள்? அந்த பரப்ரும்மத்தைப் பார்ப்பதற்காகத் தானே...? அவனே நேரில் வந்த பிறகு,

“நீ கொஞ்சம் நேரம் உட்கார்ந்து கொண்டிரு; நான் ஹோமங்களைப் பண்ணி முடித்து

முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்


ல - 28
நித்தியம் பத்து
காயத்ரி
ஜபிக்கும்
ஒருத்தர்,
அதைச்
சொல்லிக்
கொள்ள
அவசியமேயில்
லாமல் அவர்
முகமே காட்டிக்
கொடுக்கும்.

விட்டு வருகிறேன்..." என்று சொல்வதா? சொல்லலாமா?!

ஆகையினாலே, நேரே அவனே கிடைத்துவிட்ட பிறகு எல்லோருக்கும் தானாக விட்டுப் போய்விட்டது!

தூங்குபவன் கைப்பண்டம் போலே.. என்று உவமை சொல்வார்கள்.

அப்படியென்றால்...?

"பகவானிடத்திலே நாம் ஈடுபட்டோமானால், அது எப்படி இருக்கும்?" என்று ஒருத்தர் கேட்டார்.

"தூங்குபவர் கைப்பண்டம் போலே..." என்று பதில் வந்தது.

எப்போது பார்த்தாலும் கையிலே ஒருத்தர் குடை வைத்துக் கொண்டிருப்பார். அது மழைக் காலமாக இருக்கட்டும்; வெயில் காலமாக இருக்கட்டும்... குளிர் காலமாகக் கூட இருக்கட்டும்.. எப்போதும் கையிலே குடைதான்!

'குடையோடு ஒருத்தர் வருவாரே...' என்று அவரை அடையாளம் கூட சொல்லலாம் என்பது போல் கையிலே குடை இருந்து கொண்டிருக்கும் அவருக்கு.

இப்படிப்பட்டவர் பஸ்ஸில் ஒரு முறை ஏறி விட்டார். ஏறி உட்கார்ந்து கொண்டு கையிலே குடையை கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். தூக்கம் வந்துவிட்டது அவருக்கு...! இங்கே யிருந்து மாம்பலம் போவதற்குள்ளே தூக்கம் வந்துவிட்டது!

இவ்வளவு கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தாரே குடையை.... குடை பொத்தென்று கீழே விழுந்து விட்டது! அவரிடம் சொல்லிக் கொண்டா விழுந்தது அது? தானாகவே விழுந்துவிட்டது!

அந்த மாதிரிதான்... தூக்கம் என்பது என்ன? பகவானிடத்திலே ஈடுபடுதல்.

நாம் சம்ஸார பந்தத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறோம். அவர் குடையைப் பிடித்துக் கொண்டிருக்கிற மாதிரி நாம் எல்லா ஆசா-பாசங்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறோம். அவரிடத்திலே ஈடுபட்டோமேயானால் இது மொத்தமும் விழுந்து போய்விடும். தூங்குபவன் கைப்பண்டம் போலே, நம்மிடம் சொல்லிக் கொள்ளாமலே தானாக ஓடிப் போய்விடும்.

அதனால்தான் பகவான் வாசுதேவனைப் பார்த்த ரிஷிகளெல்லாம் எல்லாவற்றையும் விட்டு விட்டார்கள்! உயர்ந்த முனிவர்களே அப்படியென்றால் சகுனி முதலானோர் எம்மாத்திரம்! துளிக் கூட தேர்ச்சி இல்லாதவர்கள் அவர்கள்!

ஆகையினாலே, கண்ணன் வந்தால் எழுந்திருக்கக் கூடாது என்று யார் சொன்னாரோ, அவர்தான் முதலில் எழுந்து நிற்கிறார்!

அப்புறம் ஒருத்தருக்கொருத்தர் பார்த்துக் கொண்டு, 'நீ ஏன் எழுந்தாய்?' 'நீங்களே எழுந்து நிற்கும்போது என்னை ஏன் கேட்கிறீர்கள்...' என்றெல்லாம் கேட்டுக் கொள்கிறார்கள்!

அப்படிப் பேசிக் கொள்ளும் போதுதான் தாங்கள் எழுந்து நிற்பதே அவர்களுக்குத் தெரிகிறது!

அப்படி பகவான் அந்த சபைக்குள்ளே பிரவேசித்தான்.

வேதம் சொல்கிறது: "அவதார காலத்தில் அவன் மகிமை எப்படிப்பட்டதாய் இருக்கும் என்பது தெரிந்ததே" என்கிறது. விஷ்ணு அல்லவோ வீர்யம் மிகுந்தவன். சமஸ்த தேவதைகளையும் தாங்கக்கூடியவன்.. அதனாலேதான் விஷ்ணு என்றே அவனுக்குப் பெயர்.

அப்படிப்பட்டவன் பகவான் என்பதாலே, அவன் உள்ளே நுழைந்ததும், அந்த பிரும்ம தேஜஸினால் அனைவரும் எழுந்து நின்றார்கள்.

**ப**கவானிடத்திலேயிருக்கிற அந்த தேஜஸ் நமக்கும் வரும், காயத்ரியைச் சொல்லும்போது.

காயத்ரி என்கிற தனம் நம் கையில் இருந்தால் எல்லாம் அதை நாடி ஓடி வரும். காயத்ரியை விட்டு விட்டால் எல்லா விதத்திலும் நஷ்டம்.

தேவதைகளெல்லாரும் காயத்ரியை ஸ்தோத்திரம் செய்கிறார்கள்.

அம்மா காயத்ரி! நீ நல்ல பலம் பொருந்தியவள்; நீ தேஜஸ் பொருந்தியவள்; காந்தி பொருந்தியவள்... நீ எங்கள் பக்கம் இல்லையென்றால் எங்களுக்கு ஏது தேஜஸ்? ஏது பலம்?... எல்லாமே காயத்ரிதான்.

ஒரு தேவதையின் இருப்பிடம் நமக்குத் தெரியாது என்று வைத்துக் கொள்வோம்... அந்த தேவதைக்கான காணிக்கையை நாம் காயத்ரி மூலமாகவே சேர்ப்பிக்கலாம்.

லௌகிகத்தில் ஒருத்தர் பெயரை எழுதி கீழே C/O. என்று போடுகிற மாதிரி! அந்த மாதிரி 'காயத்ரி' என்று போய்விட்டால் உரிய இடத்துக்குப் போய்விடும்.

ஏனென்றால், சமஸ்த தேவதைகளும் காயத்ரிக்குள் அடக்கம். சர்வ மந்திரங்களும் காயத்ரிக்குள் அடக்கம். சர்வ தந்த்ரங்களும் காயத்ரிக்குள் அடக்கம்; சர்வ யந்த்ரங்களும், சர்வ தேவதைகளும் காயத்ரிக்குள் அடக்கம். எல்லா சந்தஸ்களும் காயத்ரி சந்தஸுக்குள் அடங்கியிருப்பதாலே அதற்குப் பெருமை.

(தொடரும்)

ஜேம்ஸ் ஏ. கார்ஃபீல்ட் என்னும் முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி ஒரு கையால் லத்தீன் மொழியில் எழுதிக் கொண்டிருக்கும் போதே இன்னொரு கையால் அதே நேரத்தில் கிரேக்க மொழியிலும் எழுதுவாராம்!

— ப. இராம முருகன்

# பா. ராகவன்

பத்து நிமிஷத்துக்கு முன்னால், பிரச்னை எதுவும் இல்லாமல், சுமுகமாக நான் தற்கொலை செய்து கொண்டேன். முன்னதாக, இந்தக் காரியத்துக்கு இன்னார்தான் காரணம் அல்லது காரணம் இல்லை என்று கடிதம் ஏதும் எழுதி வைக்கவில்லை. என் மரணம், உள்ளூரில் ஒரு செய்தியாகக் கூடத் தெரிந்து விடக் கூடாது என்பதால்தான் நாநூறு கிலோ மீட்டர் தள்ளி வந்து செத்துப் போனேன். இதற்குமேல் நான் இருப்பது எத்தனை அவமானமோ, அதை விடப் பெரிய அவமானம், நான் இறந்து போனது வெளியே தெரிவது. முக்கியமாக, வைதேகிக்குத் தெரியக் கூடாது.

இருட்டு விலகாத ஆற்றங்கரையில் என் உடம்பு குப்புறக் கிடந்தது. இப்படித்தான், எப்போதாவது குப்புறப் படுத்திருந்தால் வைதேகிக்குக் கொண்டாட்டமாகப் போய்விடும். சப்தமில்லாமல் பின்னால் வந்து, தடாலென்று மூச்சுப் பிடிக்க முதுகில் விழுந்து கட்டிக் கொள்வாள். ஒரு கணம் பேச்சு மூச்சு இல்லாமல் போய்விடும். அப்புறம் 'வலிக்கிறதாடா?' என்று அப்பாவியாகக் கேட்டுவிட்டுத் தடவிக் கொடுப்பாள். அதிர்ச்சி தருவது அவளுக்குப் பிடித்த விளையாட்டு. எல்லாமே குட்டிக்குட்டி அதிர்ச்சிகள். இதெல்லாம் போரடித்து விட்டதோ என்னமோ? மொத்தமாக சொல்லிக் கொள்ளாமல் ஒரு நாள் ஓடிப் போனாள். மாபெரும் அதிர்ச்சி என்று சொன்னால் கூட அதன் வீரியம் குறைச்சலாகத்தான் வெளிப்படும். என் உடம்பு கிடக்கிற கோலத்தை நீங்கள் பார்க்க வேண்டும். சிலுவைக்குப் பதிலாக மணலில் அறையப்பட்ட ஏசுநாதர் மாதிரி, கைகால்கள் ஹாவென்று விரிந்து கிடக்க, மகத்தான தோல்வியின் அவமானக் கறை முகத்தில் அப்பட்டமாகப் படர்ந்து, ஒழுகிக் காய்ந்து கிடக்கிறதைப் பார்ப்பீர்கள்.



அவள் யாரோடு ஓடிப் போனாள் என்பதே தெரியாதது தான் என் முதல் அவமானம். ஏன் போனாள், எப்போது, எப்படிப் போனாள், பகலிலா, இரவிலா என்பதும் தெரியாதது. இரண்டாவது. நாலு வருஷமாக, எனக்கே எனக்கு என்று பிரத்தியேகமாக ஒரு ஜீவன் இருப்பதாக நினைத்துக் கொண்டிருந்த அறியாமை மூன்றாவது.

"என்னடா, சகாதேவா... நீ இங்க புளியோதரை பிசிஞ்சுண்டிருக்கே? அங்க உன் சம்சாரம் பொட்டி படுக்கையோட மதுரைல இறங்கிப் போயிண்டிருக்கா? கூடப் போறவன் யாரு? அவ அம்மாவீடு, அம்பாசமுத்திரம்னில்லே சொல்லி இருக்காய்?"

மத்தியான பஸ்ஸில் விருதுநகரிலிருந்து வந்திறங்கிய கிருஷ்ணமாச்சாரி, அக்கறையாகத் தகவல் சொல்லிவிட்டு மேற்கொண்டு புலனாய்வில் விருப்பமில்லாதவனாக, 'ஜாங்கிரியிலே கடலெண்ணெய் வாசம் சகிக்கலே' என்றபடி நகர்ந்து போனது நேற்று நடந்தது போலத்தான் இருக்கிறது.

அத்தனை இரைச்சல் மிகுந்த கல்யாண வீட்டில், நான் புளியோதரை கலந்து கொண்டிருந்த வாணலியை தடாலென்று கீழே சரியவிட்ட சப்தம் யாருக்கும் கேட்டிருக்க நியாயமில்லை. மாதவனைக் கூப்பிட்டு, "நான் போறேன்,

உடம்பு முடியலை" என்று மட்டும் சொல்லி விட்டு, பாய்ந்து பஸ்ஸைப் பிடித்து வீட்டைத் தொட்டபோது கதவு ஏதும் பூட்டியிருக்கவில்லை. பூட்டிவைக்கிற அளவுக்கு உள்ளே பெரிய சொத்து ஒன்றுமில்லை; வைதேகியைத்தவிர. அவள் தான் ஓடிவிட்டிருந்தாள் - 'தேட வேண்டாம்' என்கிற ஒரு வரிக் குறிப்பை மட்டும் விட்டுவிட்டு.

அப்போதையே என் அதிர்ச்சியை வார்த்தைகளில் காட்ட முயல்வது வெறும் விரயம். என்ன குற்றம் செய்திருக்கிறோம் என்பதே தெரியாமல், வழக்கின்றி, விசாரணை இன்றி, நேரடியாக தண்டனை தரப்படுவதைக் காட்டிலும் வேறு குரூரம் இருக்க முடியாது.

சீ போடா சமையல்காரா என்று வைதேகி எப்போதாவது செல்லமாகத் திட்டியிருக்கிறாள். அது ஒன்றும் கேவலமல்ல என்று பேச்சுவாக்கில் பலமுறை நான் புரியவைக்க முயன்றிருக்கிறேன். தவிரவும் அவளது அப்பாவும் கூட இதே தொழிலாளியாகத்தான் கடைசிவரை இருந்து, கரண்டிக் கையுடனே செத்துப் போனார். வெறுத்து ஓடிப் போக இது ஒரு காரணமாக இருக்க முடியாது என்று முதல் தீர்மானத்தை நானே முன் மற்றும் வழிமொழிந்து கொண்டேன்.

பிறகு? வெளித் தோற்றம், அழகு, பர்ஸனாலிட்டி.

அது ஒரு பொருட்டல்ல. பிடிக்காத பட்சத்தில் கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்க மாட்டாள்...

காரணங்கள், காரணங்கள்.. கரண்டச் கரண்ட மனப் பள்ளங்களில் வைதேகி விட்டுப் போன கலைடாஸ்கோப் ஜாலங்கள்.



**க**ல்யாணம் ஆன புதிதில் ஒரு நாள், "உங்களுக்கு முன்னால் நான் செத்துப் போயிட்டால், நீங்க ரெண்டாங் கலியாணம் பண்ணிப்பீங்களா?" என்று கேட்டாள் வைதேகி.

வந்ததே ஆத்திரம்! பல்லைக் கடித்துக் கொண்டு குப்புறத் திரும்பிப் படுத்துக் கொண்டேன்.

"கோவிச்சுக்காதீங்கோ, ப்ளீஸ்!"

நான் திரும்பவில்லை.

"மன்னிச்சுக்கோங்கோ. தெரியாமக் கேட்டுட்டேன்."

"பார்! கல்யாணம்ங்கறது எல்லாருக்கும் வெறும் சம்பவம். எனக்கு அது சரித்திரம். உனக்குச் சொன்னால் புரியாது."

அவளுக்குப் பல விஷயங்கள் புரியவில்லை. நான் ஒளித்து ஒளித்து வைத்து, துளித்துளியாகக் காட்டுகிற அன்பு. வார்த்தை

# ஓட்டம்

களை விரயம் செய்யாமல் வருடலில் வெளிப்படுத்துகிற என் காதல். அன்று போட்ட ஜாங்கிரி அல்லது லட்டுவை ரகசியமாக எடுத்து வந்து இரவுகளில் அரை வெளிச்சத்தில் ஊட்டிவிடுகிற போது கலக்கிற பிரியம்.

பேண்ட், ஷர்ட் போட்டு, இன் பண்ணி, ஷூமாட்டி, நான் ஆபீஸ் போகவேண்டும் என்றான் ஒரு நாள். என் எட்டாங்கிளாஸை ஞாபகப்படுத்தியபோது, அநாவசியத்துக்கு அன்று ராத்திரி முழுக்க அழுது தீர்த்தாள்.

அதுவா காரணம்? இருக்க முடியாது என்றுதான் தோன்றியது. என்னை, என் சகல குறைகளையும் நீந்திக் கடந்து நேசிக்கிறாள் அவள் என்று பல தருணங்களில் எனக்கு நானே அடையாளம் காட்டிக் கொண்டிருக்கிறேன்.

ஒரு தரம் அவளது மாமா பிள்ளை கல்யாணத்துக்காகத் தென்காசி போக வேண்டியிருந்தது. ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி, வருகிற வழியில் மூலைக்கு மூலை பஜ்ஜிக்கடைகள். வாழைக்காய், உருளைக்கிழங்கு, வெங்காய பஜ்ஜிகளைத் தாண்டி வேறெதையும் அறியாத வைதேகிக்கு நான் தென்காசி ஸ்பெஷல் மூலிகை பஜ்ஜிகளை அடையாளம் காட்டினேன். கற்பூரவல்லி இலையில் ஒரு பஜ்ஜி. மற்றும் குற்றால மலைச்சாரலிலிருந்து பறித்து வரப்பட்ட மூலிகை இலைகளை மாவில் தோய்த்துப் பொறிக்கப்பட்ட வாசனை பஜ்ஜிகள். தொட்டுக்கொள்ள மிளகாய்க்கு பதில் மிளகு சேர்த்து அரைத்த பல வண்ணச் சட்னி. காரம் கண்ணில் வடிய, ரசித்துச் சாப்பிட்டாள் வைதேகி. பதினைந்து ரூபாய் செலவு, என்னளவில் அதிகம்தான். ஆனால் வைதேகியின் முகமொட்டு மலர்கிறதைப் பார்க்க, செலவு ஒரு பொருட்டல்ல!

**''அவனை ஏண்டா இப்படி செம அடி அடிச்சு துன்புறுத்தியிருக்கே?''**

**''பின்னே, என்னை எருமை மாடுன்னு திட்டினான். பொறுத்துக்கிட்டேன்... கழுதைன்னான்... அப்பவும் சும்மா இருந்தேன்... திடீர்னு போடா பாகிஸ்தான் தேர்டு அம்பையர்'னு திட்டினான்... என்னால் பொறுக்க முடியலை!''**

— புளியறை கணேசன்



சாப்பிட்ட சரக்கு வயிற்றை அடைக்க, கல்யாண வீட்டில் எதுவுமே ரசிக்கவில்லை. ஆனாலும் திருநெல்வேலிக்காரக் கரங்கள் சமையலில் சிலபல ஜாலங்கள் காட்டியிருக்கக் கூடும். என்னைப் போன்ற தேர்ந்த வல்லுநர்களால், வருகிற வாசனையை வைத்து, சுவையை இனம் கண்டு கொள்ள முடியும்.

நான் சமையல் உள்ளுக்குப் போனேன். சகதுறை வித்தகர்கள் சங்கமிப்பது பெரியகாரியமல்ல. கொஞ்ச நேரத்தில் அந்த ஹெட்குக் என் சிநேகிதராகிவிட, வெந்தயத்தூள் தூவிய சாம்பாராக எங்கள் பேச்சு மணக்க ஆரம்பித்தது.

என் புதிய நண்பர் எனக்கு, அன்றைய ஸ்பெஷல் ஐட்டங்களைப் பார்ஸலாகக் கட்டிக் கொடுத்தார். ரகசியமாகத்தான்.

ஹாலுக்கு வந்து விடை பெறுகிற நேரத்தில், வைதேகியின் பணக்கார மாமா உரக்கச் சொன்னார்:

''இளம்பியாச்சா? இத்தனை சொந்தக்காராளோட ஒரு வார்த்தை பேசலை. சமையல்காரனோடதான் மாப்பிள்ளைக்கு சகஜமா இருக்க முடியறது.''

''உம்மோட சகஜமா இருந்தால் சாத்துக்குடிப் பழக் கவரோட சரி. சமையல்காரரானா, ஒரு ஸ்வீட் கடையவே இல்லே பார்ஸல் பண்ணிக் குடுத்திருக்கார்!''

பிடரியில் பேய் அடித்தாற் போலக் குரல் வந்த பக்கம் திரும்பிப் பார்த்தேன். கொத்துக் கொத்தாக நூறு முகங்கள். நூறு பாவங்கள். யார்? யார் விட்ட பாணம் அது? அசல் திருநெல்வேலி நக்கலில் ஹாலே கலகலத்தது.

வெட்கத்தாலும் அவமானத்தாலும் நான் நாலடி சுருங்கிப் போய் வைதேகியைப் பார்த்தேன். அவள் பேசவேயில்லை. என் கையைப் பற்றிக் கொண்டு வேகமாக வெளியேறினாள்.

வழியில் நான் அந்தப் பேச்செடுக்கத் தொடங்கினபோது சட்டென்று வாயைப் பொத்தினாள். "என் மாமா சார்பில் நான் மன்னிப்பு கேக்கறேன்" என்றாள்.

பொழுது விடியத் தொடங்கி விட்டது. முதலில் இரண்டு மீனவர்கள் தாம் என்னைப் பார்த்தார்கள். குடிகாரன் என்று நினைத்திருந்தார்கள் போலும்.

"நைட்டு விழுந்தானா, இப்ப அடிச்சிட்டு விழுந்து கிடக்கறானான்னு தெரியலை" என்று பேசிப் போனார்கள்.

நான் குடித்திருந்த பேகான் ஸ்ப்ரே வாசனைக்கு ஏழெட்டு ஈக்களும் ஒரு நாயும் வந்து முகர்ந்து பார்த்துவிட்டு, ஆயத்தமாயின. மறுபடியும் திரும்பி வந்த மீனவன், "டேய், அய்

யருடா'' என்றான் என் மார்பை கவனித்து விட்டு.

"இருக்கானா? பூட்டானா?"

என் உடல் ஒரு கவனத்துக்குரிய பொருளாகிக் கொண்டிருந்தது. நான் சுவாரஸ்யமாக அதை கவனித்துக் கொண்டிருந்தேன்.

வைதேகிக்கு உடலளவிலும் நான் குறை ஏதும் வைத்திருக்கவில்லை. குழந்தை தற்சமயம் வேண்டாம் என்று அவள்தான் சொல்லியிருந்தாள்.

எது, எது அவளை என்னிடமிருந்து விலகி ஓட வைத்தது? நாலு வருஷத்தில் நான் அவளைப் புரிந்து கொள்ளவே இல்லையோ என்று சந்தேகம் வந்தது. கடவுளே, இந்த வார்த்தையே அதன் பொருளை இழந்து, எத்தனை அபத்தமாகத் தேய்ந்து ஒலிக்கிறது! எதை என்னிடம் எதிர்பார்த்தாள்? என்ன ஏமாற்றம் கண்டாள்? ஏன் ஓடிப் போனாள்? தனியாகத்தான் போனாளா? யாரோடாவதா? 'கூடப் போறவன் யாருடா?' - கிருஷ்மாச்சாரியின் குரல் இன்னமும் தெளிவாகத்தான் கேட்கிறது.

முகமே தெரியாத அந்த யாரோ ஒருவன் என் இத்தனை வருஷ வாழ்க்கையை, அதன் முழு அர்த்தம், அனர்த்தங்களுடனும் சேர்த்து ஒரு பேகான் ஸ்ப்ரே டப்பாவில் கரைத்து விட்டான். அவனைச் சொல்லிக் குற்றமில்லை. மல்யுத்தப் போட்டியில் நடுவரால் கை உயர்த்தப் பட்ட வெற்றி வீரன் அவன். துவண்டவன் தூற்றுவதில் அர்த்தமில்லை.

ஆனால் எப்படி அவன் வைதேகியின் எல்லைக்குள் எட்டிப் பார்த்தான்? எங்கிருந்து, எவ்வாறு வந்தான்? எதையுமே அரசல் புரசலாகக் கூடத் தெரிந்து கொள்ளாமல் இருந்திருக்கிறேன். கல்யாணம், காது குத்தல், திவசம், பார்ட்டி, நேர் கான்ட்ராக்ட், சப் கான்ட்ராக்ட், உள்ளூர், வெளியூர் என்று எதையும் பார்த்ததில்லை. காசைக் கொடுத்தால் கரண்டியைப் பிடித்துக் கொண்டு, நடக்கிற வாக்கில் செருப்பை மாட்டிக் கொண்டு கிளம்பி விடுவேன். நாட்களின், வாரங்களின் இடைவெளி கூட நேர்ந்ததுண்டு - வைதேகியுடன் இருப்பதில்.

பசிக்கிற வேளைக்குச் சோறும் கிழிகிற வேகத்துக்குப் புடைவையும் தரத் தவறியதில்லை. ஆனால், சோறும் புடைவையும் மட்டும் வாழ்க்கையில்லை என்று சொல்லாமல் சொல்லிக் காட்டிவிட்டாள்.

முன்னறிவிப்பு ஏதுமின்றி என் கிரீடம் வேறொரு தலைக்கு மாற்றப்பட்டுவிட்டது. இனி குமுறிப் பயனில்லை. தேடிப் போய் வஞ்சம் தீர்ப்பதிலோ, நியாயம் கேட்பதிலோ அவமானம் தவிர, வேறெதுவும் லாபமாகப் போகிறதில்லை. ஆனால், அந்த யாரோ



'சேலம் மாவட்ட தாம்புக் கயிறு போல' என்று, நீளமான பேச்சு, முடிவற்ற விவாதம் போன்றவற்றுக்கு உபமானம் சொல்வார்கள். சேலம் மாவட்ட கிணறுகள் அத்தனை ஆழம்! அதற்குக் கொஞ்சமும் குறைந்ததல்ல ராஜஸ்தான் மாநிலக் கிணறுகள். இதன் காரணமாகத்தான் ராஜஸ்தானில் ஏகப்பட்ட சுற்றுக்களுடன் முண்டாசு கட்டும் பழக்கம் ஏற்பட்டதாம்! முண்டாசு அவிழ்த்தால் கிணறு ஆழத்துக்கு நீளமாயிருக்கும்! முனையில் குடமோ வாளியோ கட்டி, தண்ணீர் இழுத்துக் கொள்ளலாம்!

ஆதாரம் : **சுவையான செய்திகள்**

தகவல் : **ஆவன்**

ஒருவன் என்னளவில் முகமே இல்லாதவனாக இருப்பதுதான் என்னைக் குத்திக் கிழித்துக் கொண்டிருந்தது.

ஒரு மாதம், ஊர் ஊராக, மாநிலம் மாநிலமாகப் பைத்தியம் போல் அலைந்துவிட்டு எல்லைக்குள் வராமல் கண்காணாத ஆற்றங் கரையோரம் அடங்கிவிட முடிவெடுத்தேன்.

இது தோல்வியல்ல; கோழைத்தனமும் அல்ல; வைதேகியின் மீதான என் சிறிய வெற்றி. சொன்ன சொல்லைக் காப்பாற்றிய பெருமிதம்.

"ஒரு வேளை உங்களுக்கு முன்னால் நான் செத்துப் போயிட்டால் ரெண்டாங் கல்யாணம் பண்ணிப்பீங்களா?"

வைதேகியின் குரல் பள்ளத்தாக்கிலிருந்து கேட்டுக் கொண்டே இருந்தது.

உணர்ச்சி வேகத்தில்தான் நான் பதில் சொன்னேன். அந்த நேரத்தில் அப்படியொரு பதில் அபத்தமாகவும் கூடப்பட்டது. ஆனாலும் அதைத்தான் நான் நிஜத்தில் நிரூபித்தேன்.

"நம்பு வைதேகி. நீ செத்துப் போன ஞாபகம் மறையறதுக்குள்ள நானும் போயிடுவேன்."

நதிக்கரையில் என்னைச் சுற்றிப் பெரும் கூட்டம் சேர்ந்திருந்தது.



'நக்கீரன்' கோபால்

ஐம்பதடி உயரத்தில் நின்று கொண்டு என் நெஞ்சில் துப்பாக்கியால் குறி வைத்தவன் - பேபி வீரப்பன்!

ஒரு வினாடி தாமதித்திருந்தாலும் நான் தொலைந்திருப்பேன். "யோவ் பேபி! சுட்டுடாதய்யா! இவரு நக்கீரன் ஆசிரியர்! சுடாத! சுடாத!" - அலறிக் கொண்டு எனக்குக் குறுக்கே பாய்ந்து பேபியை நோக்கி, என்னை மறைத்தபடி ஓடினான் காட்டுவாசி.

என் உடல் சில்லிட்டு விட்டது. அதிர்ச்சியிலிருந்து மீள முடியவில்லை. சாவகாசமாக இறங்கி வந்த பேபி, "மன்னிச்சிடுங்க ஆசிரியரே!" என்று என் கையைப் பிடித்துக் கொண்டான்.

"போலீஸ்காரனுங்க மாறு வேஷத்துல நுழைஞ்சுட்டதா தகவல் வந்தது. போய்ப் பார்த்துட்டு வா மாப்ள; சுட வேண்டி வந்திச்சின்னா, ஆளைப் பார்த்து சுடு; நக்கீரன் ஆசிரியர் வேற வர்றதா தகவல் வந்திருக்குது'ன்னு மாமா சொன்னாரு. உங்களைப் பார்த்ததும் போலீஸ்தான்னு நினைச்சுட்டேன். மீசையைப் பார்த்து பயந்துட்டேன்! தப்பா எடுத்துக்காதீங்க" என்றான் பேபி.

நான் இளம்புமுன் பிளேடு கொண்டு வந்த கிராமவாசியை ஒருதரம் நினைத்துக் கொண்டேன்.

"வாங்க, இன்னும் ரெண்டு கிலோ மீட்டர் மேல போவணும். அண்ணன் குளிச்சிட்டு இருக்காரு" என்றான் பேபி.

"முதல்ல ரெண்டு விஷயத்துக்கு பதில் சொல்லுங்க. நான் வர்ற வழில பாறை இடுக்கு வழியா ஒரு ஆளு என்னைப் பார்த்தான். அவன் உங்க ஆளா?"

"ஆமா. அவன்தான் வந்து, போலீஸ் வந்துட்டதா சொன்னான்."

"இப்ப ஒருத்தன் இங்க விஸிலடிச்சிட்டே போனானே, அவன்?"

"அவனேதான் இவன்! வந்து தகவல் சொல்லிட்டுத் திரும்பிப் போயிருப்பான்."

பிரமித்து விட்டேன். அந்த வேகத்தைக் கண்டு. எப்பேர்ப்பட்ட நெட்வொர்க் அது!

மேலே நடந்தோம். ஓரிடத்தில் எங்களை, உட்காரச் சொல்லிவிட்டு, "அண்ணன் இப்ப

# வீரப்பனும் நானும் 6

வருவார், இருங்க'' என்றான் பேபி.

சில நிமிடங்களில் சிவா பரபரத்தார்.

''அண்ணே, வீரப்பன் வராரு.''

துல்லியமான ஒரு பெரும் சரிவிலிருந்து, பிடிமானம் எதுவும் இல்லாமல் வெறும் காலுடன் சமதளத்தில் நடப்பது போல விறு விறுவென்று ஏறி வந்து கொண்டிருந்தான், வீரப்பன். தோளில் அலட்சியமாகத் தொங்கிக் கொண்டிருந்தது ஒரு பெரிய துப்பாக்கி. நிறை மாத கர்ப்பிணி போல் வீங்கித் தெரிந்த வயிற்று மறைவில் வெடி பொருட்கள்!

கை கூப்பியபடி ''வாங்க ஆசிரியரே!'' என்று உற்சாகமாக வரவேற்றுக் கொண்டே வந்தான்.

கொஞ்ச நேரம் எனக்குப் பேச்சே வரவில்லை. 132 கொலைகள் செய்தவன். இரு மாநில போலீஸுக்கும் தீராத தலைவலியாயிருப்பவன். எத்தனை அலட்சியமும் உல்லாசமுமாக இருக்கிறான்!

சுதாரித்துக் கொண்டு பேசத் தொடங்கியதும், ''இருங்க, இங்க வேணாம். வேற இடம் பார்ப்போம்!'' என்றான்.

உடனே பரபரப்பாகி அக்கம்பக்கம் நோட்டம் இட்டான். ஒரு தேர்ந்த சினிமா டைரக்டர் மாதிரி கரம் விரித்து அவன் லொக்கேஷன் தேர்ந்தெடுக்கிற அழகை நினைத்தால் சிரிப்பும் வியப்புமாயிருக்கிறது எனக்கு.

உட்காருகிற இடத்தின் பின்புறம் அடர்த்தியாக நிறைய மரங்கள் இருப்பது போல் பார்த்துக் கொள்கிறான். சில குறிப்பிட்ட மரங்கள் (படம் எடுக்கும்போது) பின்புறம் தெரியக்கூடாது என்பதில் கவனமாக இருக்கிறான். ஏனென்றால், சில மரங்கள், சில காடுகளில் மட்டுமே உண்டு. வீடியோவில் போலீஸ் அந்த மரத்தைப் பார்த்து, காட்டுவாசிகளிடம் விசாரித்தால் அந்த மரம் எந்தக் காட்டில் உண்டு என்று சொல்லி விடுவார்கள். அதை வைத்து வீரப்பன் உலவும் பகுதியைச் சுலபமாக வட்டமிட்டுவிட முடியும். இந்த விஷயத்தில் மிக எச்சரிக்கையாக இருக்கிறான் வீரப்பன்.

இடம் தேர்ந்தெடுத்து அமர்ந்தவுடன், ''குளிக்கறீங்களா?'' என்று கேட்டான்.



நான் அவசரமாக மறுத்துவிட்டு, "முகம் கழுவினால் போதும். முதல்ல பேசுவோம்" என்று பரபரத்தேன். வேலையை முதலில் முடிக்கிற அவசரம் எனக்கு.

ஆனால் அவனோ, "பல் தேய்க்கறீங்களா, டீ சாப்பிடறீங்களா, சாப்பாடு தயார் பண்ணட்டா, என்ன ஐட்டம் வேணும்" என்று விலாவாரியாக உபசரிக்கத் தொடங்கினான்.

ஓர் ஆள் 50 லிட்டர் தண்ணீர் கேனை அலட்சியமாகத் தோளில் தூக்கி வந்து வைத்து, சுள்ளிகளைச் சேர்த்து, தீ மூட்டி வெந்நீர் வைத்தான். கோல்கேட் பேஸ்ட் வந்தது. புத்தம்புது பிரஷ் வந்தது. பல் தேய்த்து ஆனதும் கடச்கட த்ரீ ரோஸஸ் டீ!

பாம்பு போல ஒரு பெரிய, நீளமான பாலீதின் பையைத் தூக்கி வந்தான் பேபி. அவனது இன்னொரு தோளில் வேறு இரு பாத்திரங்கள். அதில் பருப்பும் ரசமும். பாலீதின் பைக்குள் தட்டுகள், தம்ளர், சாதம் இன்னபிற.

"கறி ஐட்டம் என்னடா இருக்குது?" என்று கேட்டுவிட்டு, "ஐயா, உடும்பு, முஸ்கோந்து, மான்... என்ன சாப்புடறீங்க?" என்றான் என்னிடம்.

"அதென்ன முஸ்கோந்து?"

"கருங்குரங்கு" என்று அவன் சொன்னதும் அவசரமாக மறுத்தேன். "ஒண்ணு வேணாம். முதல்ல பேசுவமே?"

அவன் விடுகிறவனாக இல்லை.

பூசணிக்காய் வற்றல் மாதிரி அவன் ஒரு வற்றல் பார்சல் வைத்திருந்தான். விசாரித்த போது அவர்களே தயார் செய்த மான் கறி வற்றலாம்! வெங்காய பகோடா மாதிரி இருந்தது, பார்ப்பதற்கு.

சாப்பிட விருப்பமில்லாவிட்டாலும் வேறு வழியின்றி, ஒருமாதிரி சாப்பிடுவதாகப் பேர் பண்ணி விட்டு, அன்று இரவு என் முதல் பேட்டியைத் தொடங்கினேன்.

ஜெயலலிதா ஆட்சியில் தன் வேண்டுகோள்கள், பலமுறை நிராகரிக்கப் பட்டதைக் குமுறலாகச் சொன்னான் வீரப்பன்.

"அதெல்லாம் பழைய கதை. இப்ப ஆட்சி மாறிடிச்சி. இப்ப சரணடைய விருப்பமா? கேஸட்டுல அதானே சவால் விட்டிருந்தீங்? தைரியமிருந்தா யாராவது வந்து பேசட்டும்னு? இப்ப நான் வந்திருக்கேன். சரணடையத் தயாரா? நான் சி.எம்.கிட்டே பேசவா?"

அவன் தன் நிபந்தனைகளைச் (தெரிந்தது தானே?) சொல்லிக் கொண்டே வந்தான். சடாரென்று வீடியோவை நிறுத்தச் சொல்லிவிட்டு, "மாப்ளே, என்ன, போய்ப் பாரு?" என்றான் பரபரப்புடன்.

போய், திரும்பி வந்த பேபி, "ஒண்ணுமில்ல மாமா. கடத்தி (மான்)தான்" என்றான்.

ஏதோ ஒன்று அந்த வட்டாரத்துள் புதிதாக நுழைந்ததை எப்படிக் கண்டுபிடித்தான்?

விசாரித்தபோது "சிமிட்டாங்குருவி காட்டிக் கொடுக்கும்" என்றான்.

ஒரு குருவி பறப்பதை வைத்து அது இரை தேடப் போகிறதா, கூட்டுக்குத் திரும்புகிறதா, பயந்து ஓடுகிறதா என்று சிறகடிப்பதை வைத்தே கண்டுபிடிக்கிறான். படபடவென்று வேகமாகச் சிறகடித்து ஒரு குருவி பறந்து போனதை வைத்து, ஏதோ அந்நிய ஜீவன் எல்லைக்குள் நுழைந்திருப்பதைக் கண்டு கொண்டிருக்கிறான்!

இதெல்லாம் எனக்கு மிக ஆச்சர்யமாக

---



"எறும்பு வளர்த்து பயிற்சி அளிக்கப் போறீங்களா, எதுக்கு?"

"அடுத்த வீட்டிலிருந்து சர்க்கரை திருடி வரத்தான்! விலை ஏகமா ஏறிப் போச்சே!"

— காவேரிப்பட்டினம் சோமசேகர்

"என்னோட பையன் நூறு மார்க் வாங்கியிருக்கான்!"

"எதுல....?"

"தமிழ்ல இருபது; கணக்குல முப்பது; இங்கிலீஷ்ல இருபது; வரலாறுல முப்பது!"

— புதுக்கோட்டை சிற்பி சோமு.



இருந்தது. எப்போதும் - தூங்கும் நேரம் உட்பட - ராணுவ அலெர்ட்டில் இருக்கிறார்கள், எல்லோரும். நாட்டில் நடக்கிற செய்திகளை உடனுக்குடன் தெரிந்து கொள்வதில் வீரப்பனுக்கு இருக்கிற ஆர்வம் இவ்வளவு அவ்வளவு அல்ல. ஒரு நாளைக்குப் பதினாலு நியூஸ் கேட்கிறான் ரேடியோவில். காலை மாநிலச் செய்திகள் தொடங்கி, தமிழ்ச் செய்திகள், கன்னடச் செய்திகள் என்று மாறி மாறி இரவு பி.பி.ஸி தமிழ்ச் செய்தி வரை விடாமல் கேட்கிறான். அவனால் கேட்க முடியாத போது, உடனிருக்கும் வேறு யாராவது கேட்கிறார்கள். வீரப்பனைப் பற்றிய எந்தச் செய்தி ஒலிபரப்பானாலும் அதை ரெக்கார்டு செய்து வைப்பது மாதேஸ் என்பவனின் வேலை.

சரணடைவது - அதற்கான நிபந்தனைகள் என்பது மட்டுமல்லாமல் முந்தைய ஜெயலலிதா ஆட்சியின் அராஜகங்கள், வளர்ப்பு மகன் திருமணம், கர்நாடக போலீஸாரின் இயக்கம், தேவாரத்தின் அறிக்கைகள் என பேசிக் கொண்டே இருந்தான்.

இரவு பத்து, பத்தரை வாக்கில் ஒருவாறு பேட்டி முடிய, கொஞ்சம் படுத்தோம்.

"இந்தக் காட்டுலதான் மலையூர் மம்பட்டியான் இருந்தான். அவனைக் கொன்னவனும் இங்கேதான் இருந்தான். அவனை எனக்குத் தெரியும்" என்று மம்பட்டியான் கதையைச் சொன்னான், கொஞ்ச நேரம்.

இரவு ஒரு மணி. நான் புறப்படத் தயாரானேன்.

"எப்ப முடிவு தெரியும்?"

"அவசரப்படாதீங்க. இது, ரெண்டு மாநிலம் சம்பந்தப்பட்ட பிரச்னை. நிறைய விவாதிக்கணும். ரெண்டு முதல்வர்களும் பேசி, ஒரு முடிவுக்கு வரணும். கொஞ்சம் டயம் பிடிக்கும்" என்றேன்.

"மூணு மாசத்துல சொல்லிடுவீங்களா?"

"குறைஞ்சது ஆறு மாசம் ஆகும். ஆனா அதுவரைக்கும் யாரையும் கொல்றதில்லை; கடத்தறதில்லைன்னு உறுதி தரணும்" என்றேன்.

சற்று நேரம் தன் சகாக்களுடன் ஆலோசித்துவிட்டு, "சரி வனதேவதை சாட்சியா சொல்றேன். ஆறு மாசம் சும்மா இருக்கேன்" என்றான்.

கிளம்பினேன். சகுனமெல்லாம் பார்த்து, வழியனுப்பினான். "நாலு நாள் இருந்துட்டுப் போகலாமே!" என்று உபசாரம் வேறு!

நடந்தோம். அடர்ந்த காட்டுப் பகுதிச் சரிவு ஒன்றைக் கடக்கும்போது சட்டென்று பேபியும் மாதேஸூம் எங்களை "பதுங்குங்க, பதுங்குங்க!" என்று அவசரப்படுத்தினர்.

என்ன, ஏது என்று புரியவில்லை. பேபி, ரகசியமாக ஓர் இருள் பிரதேசத்தைச் சுட்டிக் காட்டினான். அங்கே கண்கள் பளபளக்க இருபது காட்டெருமைகள் - எங்களை நோக்கி முறைத்துக் கொண்டிருந்தன. ஓரடிகூட நகராமல் வழியை மறைத்துக் கொண்டு நின்றிருந்தன.

"கையைத் தலைக்கு முட்டுக் கொடுத்து, உருண்டுடுங்க. அடிபடும். ஆனா உயிர் போகாது. இப்ப வேற வழியே இல்லை!" என்றான் பேபி.

உருளுவதா? நான் திரும்பிப் பார்த்தேன். 400 அடி கிடுகிடு பள்ளம்!

(தொடரும்)



"உங்க பெண்ணுக்கு நாற்பது வயசுக்கப்புறமாவது திருமணமாச்சே... ரொம்ப சந்தோஷம்! ஆமா, மாப்பிள்ளை என்ன பண்ணுறார்?"

"கை நிறைய பென்ஷன் வாங்கறார்!"

— புதுக்கோட்டை சிற்பி சோமு

"ஸி.பி.ஐ ரிப்போர்ட் வந்ததுமுதல் தலைவருக்கும் உப தலைவருக்கும் மனஸ்தாபமாம்!"

"அப்படி என்ன ஆச்சு?"

"தலைவர் 200 கோடி லஞ்சம் வாங்கியதாகச் சொல்லி உபதலைவருக்கு 100 கோடி கொடுத்தாராம். ஸி.பி.ஐ ரிப்போர்ட்டில் தலைவர் 420 கோடி லஞ்சம் வாங்கியதற்கு ஆதாரம் இருப்பதாக எழுதியிருக்கிறதாம்!"

— அம்பை ராதாகிருஷ்ணன்



ராத்திரியில் பூத்திருக்கும் பெரிய தாமரையாய் மும்பை விரிந்திருந்தது! ஸ்வீட் ஸிக்ஸ்டீனிலிருந்து, ஸிக்ஸ்டி ப்ளஸ் வரை எல்லோரும் விடிய விடிய டாண்டியா (கோலாட்டம்) விளையாடிக் கொண்டிருக்கையில், தூங்குவது எங்கே? சிவராத்திரிகள்தான்! இரவு பதினொன்றரையுடன் ஒலிபெருக்கிகளை நிறுத்தி விட வேண்டுமென்று பெயரளவில் சட்டம்! 'இந்துக்களுக்கெதிராக இப்படி சட்டம் இயற்றியவர்கள் இந்துக்கள் தானா?' என்று நொந்து கொண்டார், புகழ்பெற்ற "சங்கல்ப்" நவராத்திரி விழாவில் கலந்து கொண்ட ஸ்மிதா தாக்கரே - பால் தாக்கரேயின்



• கவாஸ்கர்

ப்ரொட்யூசர் மருமகள்! லட்சக் கணக்கில் வாங்கிக் கொண்டு, ஃபால்குனி பதக், "நான் தேவதை" (பரீ ஹூம் மை) எனப் பாடிக் கொண்டு, நெருப்பைக் கக்கும் ட்ராகுலாவாக வானத்தில் வந்திறங்கி, தலையை உலுக்கி, சிலுப்பி, தன் குழுவினருடன் பாடி, ஆடி, லட்சக்கணக் கானவர்களை (ATN வாயிலாக 68 நாடுகளில்) கலக்கிக் கொண்டிருந்தார். தினம் ஒரு 'ஹெவி வெயிட்'டை அழைத்து வருகிறேன் பேர்வழி என்று, மூன்றாவது நாளே 'சங்கல்ப்' காரர்கள் சந்திரா சுவாமியை அழைக்க, பலரும் "ஐயோ... இவர் வெளியே வந்துவிட்டாரா?" பாணியில் விக்கிக்க, "சர்வமங்கள மாங்கல்யே" சுலோகத்தால் அவர் கிரேக்க மொழியில் (கேட்டவர்கள் அப்படித்தான் விழித்தார்கள்!) ஆசீர்வதிக்க, கூட்டம் ஒரே "ஹாய்... ஹாய்" கோஷமிட்டு அவரை அனுப்பி வைக்க... இடையே சிறப்பாக அலங்கரித்துக் கொண்டிருக்கும் + நன்றாக ஆடும், ஆண், பெண், குழந்தை முதலானோர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட.... "ஜெகதம்பிகை"யை ஃபாஷன் ஷோ ஜட்ஜாக்கி விட்டார்கள்!

## ஸர்வஜனிக் கொலு

வீட்டில் கொலுவையும் வைத்துவிட்டு, ஆபீசுக்கும் போய்க் கொண்டு, யாரை, எப்படி, எப்போது மஞ்சள் குங்குமத்துக்கழைப்பது, தினமும் சுண்டலை (செய்திருந்தால்) யார் தலையில் கட்டுவது, போன்ற பிரச்னைகளிலிருந்து மீள, மும்பைக்காரர்கள் ஒரு வழியைக் கண்டு பிடித்து விட்டார்கள்! 'கூட்டுக் கொலு' வைத்து விடுகிறார்கள்! முலுண்டிலுள்ள "எண்டெவர் சொஸைட்டி"யில் எல்லோரும் இணைந்து, சொஸைட்டி ஆபீசில்

# ஜட்ஜ் ஆன


• ஜோஷி

பொதுக் கொலு ஒன்று வைத்து, தினம் ஒருவர் வீட்டிலிருந்து 'பிரசாதம்', மஞ்சள் குங்குமம் என முறை வைத்து கொண்டாடி விட்டார்கள்! செம்பூர் ஃபைன் ஆர்ட்ஸில், ஒரு படி மேலே சென்று, உறுப்பினர்கள் வீட்டிலிருந்து பொம்மைகளைத் திரட்டி, பலபடியாக கொலு

# ஜெகதம்பிகை! மும்பை மசாலா

வைத்து, தினமும் பஜன்கள், கச்சேரிகள், கோலாட்டம் என்று, லோக்கல் கலைஞர்களை வைத்துக் கொண்டு, மஞ்சள் குங்குமத்துடன் கலை நிகழ்ச்சிகளையும் போனஸாக வழங்குகிறார்கள். வீட்டுக் கொலுவும் வைத்துவிட்டு, கூட்டுக் கொலுவிலும் ''பிஸி''யாகயிருக்கும் பெண்களும் உண்டு! டிபிகல் மும்பை - மதராஸிகள்!

## தண்ணீரில் திட்டங்கள்

**ர**யிலிலும் பஸ்ஸிலும் சட்னியாகும் மும்பைக்காரர்களின் மீது இரக்கம் கொண்டு, போக்குவரத்துத் துறை அமைச்சரான பிரமோத் நவால்கர், இனி ரோடுகளையும் தண்டவாளங்களையும் நம்பிப் பயனில்லை என்று, தண்ணிருக்குத் தாவிவிட்டார். சீச்சி... நீச்சலடிக்கவெல்லாம் சொல்லவில்லை! கடலோரப் பகுதிகளில், 400 நபர்களை ஏற்றிக் கொள்ளக் கூடிய படகுகளைக் கொண்டு, தண்ணீரில் போக்குவரத்துத் தொடங்கினாலென்ன என்று கேட்கிறார். மும்பை - நோவா கதீவா துறைமுகங்களை இணைத்து, ''கார்கோ''வையும் ஏற்றிச் செல்ல முடிந்தால், கட்டணங்கள் ஓரளவு குறையும் என்று நினைக்கிறார். தானா - முலுண்டுப் பகுதிகளிலிருந்து, கேட்வே ஆஃப் இந்தியா வரையிலான ''hover craft' திட்டத்திற்கு (தண்ணீரின் மீது பறக்கும் ஊர்தி) பச்சைக் கொடி காட்டிவிட்டார். வர்ஸோவாவிலிருந்து ஜுஹூ, பாந்தரா, வர்லி வழியாக, நரிமன் பாயிண்டிற்கு 'வாட்டர்-பஸ்'களுக்கு ஏற்பாடு செய்து விட்டால், மும்பையின் போக்குவரத்துப் பிரச்னை தீர்ந்து விடும் என்கிறார். ஆனால், சாதாரணர்களின் 'பர்ஸு'க்கு ஏற்றதாய் இருந்தால்தான் இதெல்லாம் வெற்றி பெறும் என்பதை சிந்தித்துப் பார்க்கும்போது, தண்ணீர் போக்குவரத்துத் திட்டம், தண்ணீரில் எழுதிய திட்டமாகி விடுமோ என்று கவலையாய் இருக்கிறது!

## திருட்டு அதிர்ஷ்டம்

**வ**ர்லியிலுள்ள பார்வையிழந்தவர்களுக்கான 'ஹாப்பி ஹோம்' பள்ளியிலிருந்து, அவர்களுடைய செல்ல நாய்க்குட்டியான கோல்டி ஜின்ஜரை திடீரென்று காணவில்லை. குழந்தைகளெல்லாம் துக்கத்திலிருக்கிறார்கள் என்ற செய்தி சில தினங்களில் வெளிவர, சில மணி நேரங்களில் அந்த நாய்க்குட்டியை, குடிசைப் பகுதிகளிலிருந்து ஒரு சிறுவன் விற்க முயற்சிப்பதாக யாரோ ஒரு பெண், பள்ளியின் பிரின்சிபலுக்கு தகவல் தர, இவர்கள் ஓடிச் சென்று கோல்டியை மீட்டது பெரிய செய்தி! செய்தியைப் படித்துவிட்டு எக்கச்சக்க ஃபோன் கால்கள்! சிறுவன் தன் நாயுடன் பள்ளிக்கு வந்து விட்டது படு உருக்கம்! அதைவிட நெகிழ்ச்சியான விஷயம் - குட்டியைத் திருடி விற்க முயன்ற சிறுவனுக்கு, 'ஹேப்பி ஹோம்'காரர்கள், காலணி, சீருடை எல்லாம் வழங்கி, மேல் படிப்பிற்கும் உதவ முன்வந்ததுதான்!

## 'ஹாஹ்ஹா'வா? ஊஹூம்!

**மூ**லைக்கொன்றாய் முளைத்திருக்கும் Laughter Club களில் உறுப்பினராகி, மலர்ந்தும் மலராத காலைப் பொழுதை 'ஹாஹ்ஹா...' என கோரஸாகக் கூவி அழைப்பது இப்போதெல்லாம் மும்பையில் சகஜமாகிவிட்டது; 'அங்கே சிரிப்பவர்கள் சிரிக்கட்டும், அது ஆரோக்கியச் சிரிப்பு' என்று சிரிக்காதவர்கள் கண்டு கொள்ளாமல் இருக்க வேண்டியதுதானே? 'அதெப்படி இளங்காலையின் இனிய தூக்கத்தைக் கலைக்கப் போவது?' என சண்டைக்கு வருகிறார்கள்! அதுவும் பூங்காக்கள், விளையாட்டு மைதானங்களைச் சுற்றியுள்ள கட்டடங்களிலெல்லாம் இந்த எதிர்ப்புக் குரல் ஏகமாக எதிரொலிக்கிறது. சிலர் சிரித்தால் தீபாவளி! பலர் சிரித்தால் தலைவலி போலும்!

## கனவு நனவாகுமா?

**பா**ந்த்ராவில், 2000 சதுர மீட்டர் நிலப் பரப்பை கனில் கவாஸ்கருக்கு பவார் அரசு இனாமாக வழங்கியது, ஒன்பது வருடங்கள் முன்பாக! அங்கே ''இன்டோர் கிரிக்கெட் அகாதமி'' ஒன்றை நிறுவ வேண்டுமென்பது ஸன்னியின் கனவு; அது இன்றளவும் கனவாகவே இருப்பதற்குக் காரணம் ஆனானப்பட்ட கவாஸ்கருக்கே, ஸ்பான்சர்கள் 'டேக்கா' கொடுப்பதுதான்! இன்னும் ஆறு மாதத்துக்குள் ப்ராஜக்டை ஆரம்பிக்கவில்லை என்றால் நிலத்தை திருப்பித் தந்துவிடும்படி மராத்திய அரசு ஒரு கடிதம் அனுப்பியுள்ளது. 'எனக்கு இது பற்றித் தெரியவே தெரியாதே! தெரிந்திருந்தால் நான் உதவி செய்திருப்பேனே' என்கிறார் முதல்வர் ஜோஷி! இப்போதுதான் தெரிந்து விட்டதே! இனியாவது கனவு நனவாகுமா?

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**

# பரிசு பெற்றார்கள்; பரவசமடைகிறார்கள்!

தான் எழுதுகிறேன்'' என்கிறார்.

எப்போதாவது எழுதினாலும் எப்போதும் நிற்கிறபடி எழுதுவதால் தானே பரிசுகள் சாத்தியமாகின்றன!

**"மா**ர்க் கெட்டுக்குப்போகும் போது நான் பார்த்த ஒரு சிறு காட்சிதான் எனக்குக் கிடைத்த விதை. விதை, கதையாகி அதற்குக் கல்கியில் முதல் பரிசும் கிடைத்ததில் ஏக மகிழ்ச்சி!"



• பா. உஷாராணி

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் இவ்வாண்டு முதல் பரிசு பெற்ற பா. உஷாராணிக்கு வயது இருபத்தாறுதான்! அஞ்சல் வழியில் எம்.ஏ. தமிழ் படித்துக் கொண்டு, அக்கா நடத்தும் டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட்டையும் கவனித்துக் கொண்டிருக்கும் இந்தப் பரமக்குடிக்காரர் எழுத ஆரம்பித்தது நாலு வருஷம் முன்புதான்! வாரமலரில் அறிமுகமாகி அமுதசுரபி, கோகுலம் கதிர் என்று ரவுண்ட் அடித்துவிட்டு, கல்கிக்கு வந்திருப்பது இப்போதுதான். "கல்கியில் என் கதை வெளியாக வேண்டுமென்பது என் நீண்ட நாள் தவம்!" என்கிறார் உணர்ச்சிப் பெருக்குடன். தவம் பலித்து விட்டதில் மட்டற்ற மகிழ்ச்சி!

"இப்பரிசு மூலம் எனக்குப் புதிய முகம் கிடைத்தாற்போல் உற்சாகமும் ஊக்கமுமாக உள்ளது!" என்கிறார் உஷாராணி.



• அமராவதி

**சா**வு வீட்டில் வேஷம் கட்டி துக்கம் பாட வருபவனின் சொந்த சோகத்தைக் கவித்துவமாகப் படம் பிடித்து, மூன்றாம் பரிசு வாங்கிய அமராவதி, "பள்ளிப் பருவத்திலேயே நான் டைரி எழுத ஆரம்பித்து விட்டதுதான் என் எழுத்தின் தொடக்கம்" என்கிறார். இந்தக் கோவில்பட்டிக்காரர் ஒரு எலக்டிரானிக் இஞ்சினியர். ஆனால் இன்னும் நிரந்தர வேலை எதுவும் கிடைக்கவில்லை என்கிறார்.

கல்லூரி மலர்களில், சிறு பத்திரிகைகளில் கவிதைகள் எழுதிவிட்டு, எழுத்தாளர் சோ. தர்மன் தந்த ஊக்கத்தினால் சிறுகதைக்கு வந்ததாகச் சொல்கிறார். பரிசு பெற்ற 'வேசம்' இவரது ஐந்தாவது கதையே என்னும் போது ஆச்சர்யப்படாமல் இருக்க முடியாது!



• ஆ.சி. மணியன்

**"ஆ**றாங்கிளாஸ் படிக்கிற வயசிலிருந்தே நான் கல்கி வாசகன்!" என பெருமை பொங்கச் சொல்லும் இன்னொரு மூன்றாம் பரிசுக்காரரான (இதுதான் ரியல் எஸ்டேட்) ஆ.சி. மணியனுக்கு ஐம்பதைத் தாண்டிய வயது.

"வெண்பா எழுதுவதில் ஆர்வம். 1961 தொடங்கி, நிறைய எழுதி, பிரசுரம், பரிசு பார்த்திருக்கிறேன். இப்போது இரண்டு வருஷங்களாகத்தான் சிறுகதை ஆர்வம்" என்னும் இவர், கல்கி - கல்கி (திரைப்படம்) இணைந்து நடத்திய சுலோகன் போட்டியில் வென்று, இயக்குநர் கே.பியுடன் கலந்துரையாடியவர்.

**'ம**னிதா, நீ மகத்தானவன்!' - இரண்டாம் பரிசுக்குச் சொந்தக்காரரான பிருதிவிராஜ் (ச. ரங்கநாதன்) கல்கி வாசகர்களுக்கு ஏற்கெனவே அறிமுகமானவர்தான். போன வருஷப் போட்டியிலும் மூன்றாம் பரிசு வாங்கியவர்.

தொழில் ரீதியில் குவைத்தில் இருப்பதால் ஓர் அந்நிய மண்ணில், சம்பாதிப்பதற்காக வந்து சேரும் தாய்நாட்டுக்காரர்களைக் கூர்ந்து கவனித்து, கதாபாத்திரங்களாக ஆக்கி விடுவது இவருக்குச் சுலபமாக இருக்கிறது!

"தாய், குங்குமம், இதயம், சாவியில் எழுதியிருந்தாலும் நான் அதிகம் எழுதியிருப்பது கல்கியில்தான்" என்னும் இவர், "அடிப்படையில் நான் ஒரு வாசகன். எப்போதாவது எழுத விஷயம் கிடைக்கும்போது

ஜகதீஷா? கொண்டல்ஸா? சேச்சே!

"சென்ற வருஷப் போட்டியில் பிரசுரத் தேர்வு பெற்றது என் கதை. இந்த வருஷம் மூணாம் பரிசு. கல்கி என் இலக்கியத்தாய்!" என்கிறார் இந்த திருவாரூர்க்காரர்.

ஒரு கவிதைத் தொகுப்பு வெளியிட்டிருக்கிறார் இவர்!



• பிருதிவிராஜ்



• நிலாக்கதிர்



• ஜெயாசேகர்

**ம**ழை பொழியும் தருணத்தைப் படம் பிடித்து, ஆறுதல் பரிசு பெற்று, தனித்துவமான நடைமூலம் வாசகர்களைக் கவர்ந்த ஜெயா சேகர், சென்னை ரிசர்வ் வங்கியில் பணிபுரியும் நாற்பத்தைந்து வயதுக்காரர்.

"பதினைந்துக்கு மேற்பட்ட சிறுகதைகள் இதுவரை பிரசுரம் பார்த்திருக்கின்றன. அமுதசுரபி குறுநாவல் போட்டியில் என் குறுநாவல் பரிசு வாங்கியிருக்கிறது. 'ஒற்றையாய் சில நட்சத்திரங்கள்' என்னும் அக்கதை விரைவில் தொலைக்காட்சித் தொடராக வரப் போகிறது!" என்கிறார்.

அகில இந்திய வானொலி நாடகங்கள், தொலைக்காட்சி, வானொலி பேட்டிகள் என்று வலம் வரும் இவர், "கல்கி தந்த இப்பரிசை மிகப் பெருமையாய்க் கருதுகிறேன்" என்கிறார்.

'**இ**னி என்னிக்கி அவனோட மொற?' - சுத்தமான கோவை வட்டார வழக்கில், பண்பட்ட எழுத்து நடையுடன் ஒரு சிறுவனின் பார்வையில் சொல்லப்பட்ட கதை.

கதை படித்தவர்கள், நிலாக்கதிரை அறிமுக எழுத்தாளர் என்று ஏற்பதில் கட்டாயம் கொஞ்சம் தயங்குவார்கள்! அத்தனை சரளம்.

"ஆறுதல் பரிசு எனினும் கல்கியில் அறிமுகமாவேன் என்று கனவிலும் நினைக்கவில்லை! அதில் தேர்வாவது சாதாரண விஷயமா?" என்னும் நிலாக்கதிருக்கு (இயற்பெயர் - வெ. கோவிந்தராஜ்) வயது இருபத்திரண்டுதான்! செஞ்சேரிபுத்தூர் மேநிலைப் பள்ளியில் இடை நிலை ஆசிரியராகப் பணி.

"கவிதையில் ஆர்வம் மிகுதி. சிறுகதைக்குத் தற்செயலாகத்தான் வந்தேன். தனுஷ்கோடி ராமசாமி தந்த ஊக்கம்தான் காரணம். வட்டார வழக்கில் நிறைய செய்ய ஆசை! கல்கியின் ஆசியாலும் வாழ்த்துக்களாலும் மேன்மேலும் உயர்வேன்!" என்கிறார் நம்பிக்கையுடன்.

வண்டி வண்டியாக வாழ்த்துக்கள்! பரிசு பெற்ற எல்லோருக்கும்தான்!

**— ஆசிரியர் குழு**

**க**ள்ளடப் படங்கள் என்றால் தாயின் பெருமை, தாலியின் மகிமை பற்றித்தான் இருக்கும் என்று யார் சொன்னது? மிகத் துணிச்சலாக, குழந்தைகளை முக்கியமாக வைத்து, ஒரு குழந்தைகள் படம் எடுத்திருக்கிறார் டைரக்டர் வாடிராஜ்.

துப்பறியும் மர்ம நாவல்கள் மேல் மாளாக் காதல் கொண்டவன், பொடியன் ராஜா. ஜெகதீஷ் என்கிற எஸ்டேட் ஓனர் ஒருத்தருக்கும் அதே ரசனை. ஊருக்கு உதவுவது போன்ற நல்ல காரியங்களைச் செய்து கொண்டிருக்கிற ஜகதீஷிடம் துப். நாவல்களை இரவல் வாங்கிப் படித்து, ஃப்ரெண்ட் ஆகிறான் ராஜா.

ஜகதீஷின் இன்னொரு முகம் (டைட்டிலும் அதுதான்! 'இன்னொண்டு முகா') வில்லத்தனமானது. பணத்துக்காக நாய் அலை அலைகிறவன். ஒரு பெண்ணை, அவளது சொத்துக்காகக் கொல்கிறான். ராஜா அதைப் பார்த்து விடுகிறான். அவன் வாழ்க்கையே ஒரு துப்பறியும் கதை போல மாறிப் போகிறது.

தான் பார்த்த கொலையை வெளியே சொன்னால், ஊர் நம்ப மறுக்கிறது. "ஜகதீஷா! சேச்சே, இவன் கதை படிச்சி மெண்ட்டலாயிட்டான்" என்று பட்டம் கட்டி அந்த ஊர் கீழ்ப்பாக்கத்தில் சேர்த்து விடுகிறார்கள்.

இறுதியில் தன் நண்பர்கள் உதவியுடன் உண்மையை வெளிக் கொண்டு வருகிறான் ராஜா.

'கொலைகாரன் யாரானாலும் சரி; தண்டிக்கப்பட்டே ஆக வேண்டும்!'

அவன் படித்த கிரைம் நாவல்கள் மூலம் கற்றுக் கொண்ட பாடம் அதுதான்!

படத்தின் பெரிய விசேஷம் – வன்முறையோ, ஆபாசமோ அரை மி. மீட்டர் கூட இல்லாததுதான் என்கிறார் இதன் தயாரிப்பாளர்.

**— கிச்சா**



• **'இன்னொரு முகம்'** படத்தில் ஒரு காட்சி




# தீபாவளிப் பரிசு

## ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும்



# மகத்தான முதலீட்டுத் திட்டம்!

**ரூ.10,000 முதலீடு செய்யுங்கள்.**
**5 ஆண்டுகளில் ரூ.20,000 (இரு மடங்கு)**
**பெற்றுக் கொள்ளுங்கள்.**

**அத்துடன் 4 இலக்கியப் பொக்கிஷங்களையும் அன்பளிப்பாகப் பெறுங்கள்**

21.10.97க்குள் டெபாசிட் தொகை அனுப்புபவர்களுக்கு மட்டுமே 'அமுதசுரபி' 'கல்கி' – 1997 ஆம் ஆண்டின் தீபாவளி மலர்கள் அனுப்பப்படும். பிறகு வரும் டெபாசிட்களுக்கு 5 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து இதழ்களும் 1998லிருந்து 5 ஆண்டுகளுக்குத் தீபாவளி மலர்களும் கிடைக்கும்.

1. 'கல்கி' வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. 'கல்கி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்கு பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் 'அமுதசுரபி' இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. 'அமுதசுரபி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.

ரூ. *10,000* (ரூ. பத்தாயிரம்) 'ஸ்ரீராம் டிரஸ்ட்' பெயருக்கு செக் / டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி:

---

'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ–7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு, சென்னை – 600 102. தொலைபேசி எண்: 628 68 96   628 78 79

1. முழுப்பெயர்: திரு / திருமதி / செல்வி........................................................
   முகவரி:........................................................................................
   ...............................................................................................
   ...............................................................................................
2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர்:
   முழுப்பெயர்:..................................................................................
3. வாரிசுதாரர்:....................................................................................
4. கல்கி , அமுதசுரபி இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி:................................
   ...............................................................................................
   ...............................................................................................

CHEQUE / D.D.No.   DT.   ON

இடம் ..............................................   அன்புள்ள

தேதி ..............................................   முதலீட்டாளர் கையொப்பம்



இளமையைக் கூட்டவும், முதுமையைக் குறைத்துக் காட்டவும் உத்தரவாதம் அளிக்கும் ஒரு நகை - புன்னகை.

மற்றபடி எந்தவகை நகைகள் யாருக்குப் பாந்தமாக, வயதைக் குறைத்துக் காட்டும்படி இருக்கும்.' 'லலிதா ஜுவல்லரி மார்ட்' நிர்வாக இயக்குனர் சுகுமாரனிடம் கேட்டோம்.

"நகைகளைப் பொறுத்தவரை கிராமப் பெண்களிடையேயும், நகரப் பெண்களிடையேயும் மிகவும் வேறுபட்ட கருத்து நிலவுகிறது. நகைப் பாணி, தினுசு, நாகரிகம் இவற்றைக் கருத்தில் கொண்டு நுணுக்கமான உள்ளறிவோடு பெரும்பாலான கிராமப் பெண்கள் நகைகளைத் தேர்ந்தெடுப்பதில்லை.

சமீபத்தில் கூட ஒரு தாயும், மகளும் ஒரே மாதிரியான, கழுத்தை அடைத்துக் கொள்ளும்படியான, நெக்லஸை அணிந்து கடைக்கு வந்திருந்தனர். நகரப் பெண்கள் அப்படி ஒரு நகையைத் தொடக் கூட மாட்டார்கள் - காரணம் அது வயதை அதிகப்படுத்தித்தான் காண்பிக்கும் என்பது அவர்களுக்குத் தெரியும்.

கிராமப் பெண்களுக்கு ரசனைக் குறைவு என்பதை விட, அவர்கள்

# நளினமாக நகை அணியுங்கள்!

நகையை ஒரு சொத்தாகவே பாவிக்கிறார்கள் எனலாம். சமூகப் பழக்கம், வருங்காலப் பாதுகாப்பு, படாடோபம், கலாசாரம் என்ற போர்வைகளை அழுத்தமாகப் போர்த்திக் கொண்டு, நாகரிக எண்ணம் நுழையாமல் சிந்தனைக் கதவுகளை சாத்திக் கொண்டு விடுகிறார்கள்.

பொதுவாகப் பார்க்கும்போது எடை குறைந்த புதுப்பாணி நகைகள் அணிவது ஒருவரது வயதைக் குறைத்துக் காட்டும்.

என்றும் இளமையாய் இருப்பது எப்படி?

## இளமைப் போட்டி - 10

**நகை அணிவதையே நகைப்புக்குரிய விஷயமாக்கிவிட்ட நாலெழுத்துக்காரர் யார்?**

**இன்னும் இரண்டு வாரம்தான்! பதில்களுடன் தயாராக இருங்கள். கூப்பன் வந்து கொண்டே இருக்கிறது....!**

முதலில் பெண்களை எடுத்துக் கொள்வோம். நாற்பது, ஐம்பது வயதை எட்டும்போதே பாதிப் பேரின் உடல் பருமனாகி, அதே சமயம் தளர்ந்தும் விடுகிறது. இவர்கள் 'தவறான' நகைகளை அணிந்தால் அது அவர்களின் வயதைக் கணிசமாகக் கூட்டிக் காண்பிக்கும்.

குட்டையாகவும், தடித்த கழுத்தும் உடையவர்கள் கழுத்தில் பட்டையான சோக்கரை அணியவே கூடாது.

கருமை நிறம் கொண்டவர்கள் சிவப்பு, நீலம் மற்றும் அழுத்தமான வண்ணங்கள் கொண்ட நகைகளைத் தவிர்க்க வேண்டும். அதே சமயம் நல்ல பளிச் வெண்மை நகைகளையும் அணிய வேண்டாம் - கான்ட்ராஸ்ட் கண்ணை உறுத்தும். முத்து, Cats eye, Amethist ஆகியவை இவர்களுக்கு ஏற்றது.

முகவடிவம் அகலமாகவோ, சதுரமாகவோ இருந்தால் நீண்ட காதணிகளை அணியலாம். முகத்துக்கு ஒரு ஓவல் வடிவம் கிடைக்கும்.

ஒல்லியான நீண்ட முகம் கொண்டவர்கள் நீண்ட காதணிகளை அணிந்தால் இருக்கிற இளமைத் தோற்றமும் 'டல்'லாகி விடும். இவர்கள் குட்டையான 'ட்ராப்ஸ்' மற்றும் 'ஸ்டெட்' ஆகியவற்றை அணிவது தோற்றத்திற்கு எடுப்பளிக்கும்.

பட்டையான, கழுத்தோடு ஒட்டிய சோக்கர்கள், நீள்கழுத்து கொண்டவர்களுக்குத் தனி சோபையைக் கொடுக்கும்.

ஆண்களைப் பொருத்தவரை, சட்டை காலர் நுனியில் பொருத்தப்படும் 'டிப்'கள், அழகிய பெல்ட் பக்கிள், சட்டைப் பித்தான்கள், பளிச் கஃப்லிங்குகள் ஆகியவை கம்பீரத்தைக் கூட்டிக் காண்பிக்கும்.

மொத்தத்தில் நகை என்பதை அழகுக்கு மெருகூட்டும் விஷயமாகக் கருதி, 'அந்தஸ்து பிரகடனம் அது' என்று நினைக்காமல் செயல்பட்டாலே தோற்றத்தில் இளமை பிரதிபலிக்கும்!"

- **அருண்சரண்யா**

## நான் போக மாட்டேன்!



***மறுபடியும் ஆறு பேரைக் கடத்திப் போய் விட்டான், வீரப்பன். மறுபடியும் தூது போகப் போகிறாரா கோபால்?***

"வீரப்பனிடம் மறுபடி மறுபடி போவதென்பது விளையாட்டல்ல! நானேவாகவும் சரி; அரசு கேட்டுக் கொண்டாலும் சரி. இனி போவதில்லை என்று நான் எடுத்த முடிவு எடுத்ததுதான்!"

"முடிவுக்கு என்ன காரணம்?"

"ஒன்பது பேரை மீட்டு வந்தபோது அந்த மிருகம் மனிதனாகி விட்டான்; இனி அவனால் பிரச்னை ஏதும் வராது என்று உறுதியாக நம்பினேன். சுமார் நாற்பது மணி நேரத்துக்கும் மேலாக அவனுடன் உட்கார்ந்து பேசியபின் தீர்மானமாக எனக்குள் எழுந்த நம்பிக்கை அது! என் நம்பிக்கை பொய்த்துவிட்டது. செய்தி கேள்விப்பட்டதும் இடிந்து போய்விட்டேன். வேலையே ஓடவில்லை! இனி அவனைத் திருத்த முடியும் என்கிற நம்பிக்கை எனக்கில்லை!"

"இம்முறை உங்களுக்கு ஏதும் கேஸட் வந்ததா? நீங்கள் வந்து பேச வேண்டும் என்று கூறியிருக்கிறானே?"

"எனக்கு எந்த கேஸட்டும் வரவில்லை. அரசுக்கு அனுப்பிய கேஸட்டில் என்ன பேசியிருக்கிறான் என்ற விவரம் எனக்குத் தெரியாது. ஆனால், யார் சொன்னாலும் நான் போகப் போவதில்லை என்பதுதான் இறுதி முடிவு."

"இம்முறை வீரப்பன் விபரீதமாக ஏதும் செய்துவிடக்கூடும் என்று அஞ்சி, அவன் கோரிக்கையை அரசு ஏற்கும் என்று நம்புகிறீர்களா?"

"பொது மன்னிப்பெல்லாம் சாத்தியமா! நான் அப்படி நினைக்கவில்லை."

பேட்டி : **ஔரங்கசீப்**

# ஒற்றுமையே வாழ்வின் சாராம்சம்



**குடும்பப் பிணைப்பு**

குடும்ப அங்கத்தினர் அனைவரது பாதுகாப்பையும் கருத்தில் கொண்டு ஒவ்வொருவரும் மற்றவர்களின் மேன்மைக்காக உழைக்கும், நம்பிக்கைதரும் ஒரு அரிய உணர்வு.



# துரைமுருகனுக்கு கலைஞர் வைத்த ஐஸ்!

எப்படியெல்லாம் கைதட்டு வாங்கிக் கொண்டு போக முடியும் என்ற யோசனையுடன் மேடை ஏறியவர்கள்தாம் நிறைய! கலைஞரின் சுயசரிதையான 'நெஞ்சுக்கு நீதி' மூன்றாம் பாகம் வெளியீட்டில் நிகழ்ந்தது தான்.

ஏனென்றால் பார்வையாளர்களில் பெரும் பகுதி கட்சித் தொண்டர்கள் என்பது பேச்சாளர்கள் அறியாதது அல்ல. பேச்சாளர்களை அறிமுகப்படுத்தும் போதெல்லாம் நிர்மலா சுரேஷ், கலைஞரை சாக்ரட்டீஸ், மார்க்ஸ் போன்ற அறிஞர்களோடு இணைத்து வைத்துப் பேசுவதையே உயிர் மூச்சாகக் கொண்டிருந்தார். "சாக்ரட்டீஸும், மார்க்ஸும் தத்துவவாதிம்மா! கலைஞர் ஒரு நிர்வாகி. ஈ.வெ.ரா கொள்கைக்கு ஊழியம் செய்யும் தொண்டர்!" என்ற கமெண்ட் எழுந்தது. கலைஞர் இதையெல்லாம் பெரிதாகக் கண்டு கொள்ளவில்லை.

அமைச்சர்கள் பேசும்போதெல்லாம், "நெஞ்சுக்கு நீதி "இந்த நூற்றாண்டின் ஒரு நிலையான வரலாறு" என்றவிதமாய்ப் பேசினர். கவிஞர் அப்துல் ரகுமான், "இதைப் பள்ளிகளில் கட்டாயப் பாடத் திட்டமாக்க வேண்டும்!" என்றதோடு விடவில்லை. "பிடல் காஸ்ட்ரோ நீச்சல் குளம் கட்டிக் கொண்டான். கலைஞர் கட்டினாரா?" என்றொரு அரிய கண்டுபிடிப்பை முன் வைத்தார்.

சர்வ வல்லமை படைத்த அமெரிக்காவின் சர்வாதிகாரத்தை எதிர்த்துப் போரிட்ட போராளி, மேடையில் படாதபாடு பட்டபோது கலைஞர் முகம் களித்தது அப்பட்டமாகத் தெரிந்தது.

முனைவர் எம். அனந்த கிருஷ்ணன் பேச்சு மட்டுமே ஆழ்ந்த கருத்துக்களைப் பதிவாகப் பரப்பியவை. கூட்டத்தில் இருந்த படித்தவர்கள் இவருடைய பேச்சுக்குச் செவி சாய்த்தனர் - தொண்டர்கள் கை தட்டாமல் போயினர்! நூலில் சொல்லப்பட்ட விஷயங்களோடு தமிழ் உலகம் கொண்டுள்ள உறவும், சொல்லப்படாமல் சொல்லப்பட்டிருக்கும் கலைஞரின் அரசியல் வாழ்க்கையும் பல மைல் கற்களைக் கடந்தவை என்ற விஷயம் தடம் பதித்தது.

நெருக்கடி கால கட்டத்தில் இந்திரா எப்படி அராஜகமாகச் செயல்பட்டார் என்பதை நூலிலிருந்து எடுத்துப் பலரும் பேசினர். பத்திரிகையாளர் சாவி கூறும் போது "சுபாஷ் சந்திரபோஸ் போல சில காலம் தமிழகத்தை விட்டு வெளியே மறைந்திருங்கள் என்றேன்; கலைஞர் சொன்னார், 'இந்த வாழ்க்கை, உயிர், உடல் தமிழ் மண்ணுக்கு சொந்தமானது. நான் எங்கும் ஓடிப் போக மாட்டேன்!"

புத்தகம் வாங்க அமைச்சர்கள் அடித்துப் பிடித்துக் கொண்டு ரேஷன் கடைக் கூட்டம் போல் மேடை ஏறியதும், கூட்டம் கட்டுப்பாடு இல்லாமல் போனதால் நெரிசலானதும் ஏற்பாட்டில் சிறு குறைகள். அமைச்சர்கள் பேச்சிலும் ஆங்காங்கே சில குறைகள்.

கலைஞரின் ஏற்புரையில், எந்தவித சலனமும் இல்லாமல், குறைவான பேச்சில் "குர்நாம் சிங் கவர்னரல்ல; பஞ்சாப்பின் முன்னாள் முதல்வர்" என்று துரைமுருகனை ஒரு குட்டு குட்டிப் பேசியது மனசைக் கவர்ந்தது...

**- சு. வேணுகோபால்**

படம்: **தி. பாண்டியராசு.**



# 9 to 97

ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் கோடி ரூபாய் முதலீடாகியிருக்கிறது!

எங்கே...?

இருநூறுக்கும் மேலான பொதுத்துறை நிறுவனங்களில். இவற்றுள் ஒரு சில, மிகச் சிறப்பாக இயங்கி வருகின்றன. ஆனால், பாதிக்குப் பாதி பொதுத்துறை நிறுவனங்கள் ஆண்டாண்டு காலமாக நஷ்டத்தையே கண்டு வருகின்றன.

'பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகளைத் தனியாருக்கு விற்றுவிட வேண்டும். அதன் மூலம் பெறப்படும் பணத்தை, ஐந்தாண்டு திட்டத்தின் கீழ் வருகின்ற உருப்படியான காரியங்களுக்குப் பயன்படுத்த வேண்டும்....' என்று அவ்வப்போது பல்லவி பாடப்படுகிறது.

இந்த முறையில், இந்நிதியாண்டில் மட்டும் 4800 கோடி ரூபாய் அரசுக்கு வருமானம் கிடைக்கும் என்று எதிர்பார்த்துத்தான் வரவு செலவுத் திட்டம் தீட்டப்பட்டது. ஐந்தாவது ஊதியக் கமிஷனின் சிபாரிசுகளை அமுல்படுத்தவிருப்பதால், மேலும் பல பொதுத்துறை நிறுவனப் பங்குகளை விற்று அதன் மூலம் பெறக் கூடிய வருமானத்தை ஏழாயிரம் கோடி ரூபாயாக உயர்த்த முடிவாகியுள்ளது.

ஆனால், நடைமுறையில் பார்த்தால் எதுவுமே சுறுசுறுப்பாக நடக்கவில்லை. Disinvestment Commission (பொதுத் துறையை படிப்படியாய்த் தனியார் மயமாக்க நிறுவப்பட்ட குழு) சிபாரிசுகளைத் தூக்கி கிடப்பில் போட்டுவிட்டது அரசு.

'பொதுத் துறை நிறுவனங்களில் அரசு உயர் அதிகாரிகளின் தலையீடு அதிகம். ஆரோக்கியமான, தொழில் ரீதியான அணுகுமுறை கிடையாது; தனியார் தம் ஆர்வத்தால் முன்னுக்கு வரப் பாடுபடுவது போன்ற ஈடுபாடு இதில் கிடையாது...' என்பவை நியாயமான புகார்கள்.

இவ்வளவையும் மீறி சில பொதுத்துறை நிறுவனங்கள் லாபம் கண்டிருக்கின்றன என்பது வியப்பான, மகிழ்ச்சிக்குரிய விஷயம். இந்த வெற்றிகளை விரிவடையச் செய்ய தொழில் துறை அமைச்சர் ஆவலாக இருக்கிறார். சில மாதங்களுக்கு முன் 'நவரத்னங்கள்' என ஒன்பது பொதுத்துறை நிறுவனங்களை அடையாளம் காட்டி, அவற்றுக்கு முழுமையான சுதந்தரம் வழங்கியுள்ளார்.

கொள்கை ரீதியிலான அந்த அறிவிப்புக்கு அதிகமாக வேறு எதுவும் இத்துறையில் நடக்கவில்லை என்பது வாஸ்தவமே. எனினும் இந்தக் கொள்கை ரீதியான சிறு அறிவிப்பேகூட முன்னேற்றம்தான். கடந்த காலத் தொழில் அமைச்சர்கள் இத்தகைய முடிவை கனவிலும் நினைத்துப் பார்த்திருக்க மாட்டார்கள். இப்போது மாறன் 97 பொதுத்துறை நிறுவனங்களை 'மினி ரத்னங்களாக' அறிவித்திருக்கிறார். இவற்றுக்கும் இயக்க சுதந்தரம் அதிகரிக்கப்படும் என்று எதிர்பார்க்கலாம்.

அரசாங்கம் என்பது ஆட்சியை, நாட்டு நிர்வாகத்தை கவனித்தால் போதும்; தொழில்களையும் வர்த்தகத்தையும் தனியார் பார்த்துக் கொள்வார்கள் என்கிற ஞானோதயம் கம்யூனிஸ்ட் நாடுகளில்கூட இப்போது ஏற்பட்டிருக்கிறது.

நம் நாட்டில் இதுநாள் வரை கோடிக்கணக்கான ரூபாய்களைப் பொதுத்துறை நிறுவனங்களில் முதலீடு செய்து வீணடித்த தோடல்லாமல் அவற்றுக்கு இயக்க சுதந்தரமும் தராமல் கட்டுப்படுத்தி வைத்திருந்தது அரசு.

இப்போது தெரிகிற மாற்றங்கள் வரவேற்கத்தக்கவை. தொழில் துறை அமைச்சர் பாராட்டுக்குரியவர்.

'உலக அரங்கில் நாம் தொழில் ரீதியாகப் போட்டி போட வேண்டுமானால், ஆங்கிலம் பயில்வது அவசியமாகிறது. எனவே 'தமிழ்'ப் பற்று என்கிற பெயரில் ஆங்கிலத்தைப் புறக்கணிக்க வேண்டாம்'' என்று எச்சரித்துள்ளார் இந்த தி.மு.க. கட்சிக்காரர்!

— வி. கோபாலன்

## கல்கி கன்ஸல்டன்ஸி

# இனிமே இது தான் போட்டி

## மிக மிக மிக சுலபம்!

சுவையான, புதிய ஏவிடி அஸ்ஸாம் டீ 250 கிராம் பாக்கெட் ஒன்றை வாங்குங்கள். அத்துடன் ஒரு நுழைவுத் தாள்.

சன் டி.வி, சென்னை தொலைக் காட்சி மற்றும் விஜய் டி.வி. ஆகியவற்றில் ஏவிடி அஸ்ஸாம் டீ விளம்பரத்தைப் பார்த்த பிறகு, நுழைவுத் தாளைப் பூர்த்தி செய்யுங்கள்.

ஏவிடி அஸ்ஸாம் டீ பாக்கெட்டின் கீழ் பகுதியின் சான்றை இணைத்து, பூர்த்தி செய்த நுழைவுத் தாளை எங்களுக்கு அனுப்புங்கள்.

அதன் பிறகு, நல்ல மணம் வீசும் ஸ்ட்ராங்கான ஏவிடி அஸ்ஸாம் டீ பருகுங்கள் - பலன் கிடைக்கும், காத்திருங்கள்!

நீங்கள் வெற்றி பெறக் கூடியவை:

விரைந்து செயல்படுவோர்க்கான பரிசு : 500 ஏவிடி அஸ்ஸாம் ஏர்-பேக் (தினமும் பத்து)

ஆறுதல் பரிசு : 250 ஏவிடி அஸ்ஸாம் குடைகள்

4-வது பரிசு : 100 ஏவிடி அஸ்ஸாம் சுவர்க் கடிகாரங்கள்

3-வது பரிசு : மூன்று ரெப்ரிஜரேட்டர்கள்

2-வது பரிசு : இரண்டு கலர் டி.வி.

முதல் பரிசு : 10 சவரன் தங்கம்

வெற்றி பெறுவதற்கு 856 பரிசுகள் - இழப்பதற்கு ஒன்றும் இல்லை...

ஏவிடி அஸ்ஸாம் டீ 250 கிராம் பாக்கெட் ஒன்றை வாங்குங்கள். அது உங்களுடைய அதிர்ஷ்ட நாளாக இருக்கும்!

நுழைவுத் தாள்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 15 நவம்பர், 1997.

நுழைவுத்தாள்களை அனுப்ப வேண்டிய முகவரி : தபால் பெட்டி எண். 4550 சென்னை - 600 006




• சொல்ல மறந்தது...


• அமைதி கிட்டுமா...?


• உறுத்தும் உண்மை!


• கிண்டலே...


• ...பாராட்டு!

# எம்.ஜி.ஆர். ஆத்மா அமைதி அடையுமா?

● ஜோ. ஜெயக்குமார்,
நாட்டரசன்கோட்டை.

? 'மூப்பனாருக்குப் பதிலாக நான் போடட்டுமா நாமினேஷன்?' என்று சோ. பாலகிருஷ்ணனைப் பார்த்து முதல்வர் கருணாநிதி கிண்டலாகக் கேட்டிருக்கிறாரே...? என்ன நினைக்கிறீர்கள்?

! ரசித்தேன். அந்தக் கிண்டல் பேச்சு மூலம் எதிர்க்கட்சித் தலைவருக்கு மறைமுகமாக ஒரு பாராட்டும் கிடைத்துள்ளது என்பதை கவனிக்க வேண்டும். ஆனால் த.மா.காதான் ஆட்டைத் தூக்கி மாட்டிலே போட்டு, மாட்டைத் தூக்கி காட்டிலே போட்டு என்பது போல நாமினேஷன் விஷயத்தில் ஏக சொதப்பல் பண்ணி சிரிப்பாய்ச் சிரிக்கப் பண்ணிட்டாங்க. முதல்லயே சரியா யோசிச்சிருக்கலாமுல்ல...

● பி. ஜெயப்பிரகாஷ்,
சர்க்கார்பதி.

? கடந்த கால அரசு, வெறித்து ஓடும் மாடு; இன்றைய அரசோ முறையாகச் செல்லும் வண்டி மாடு என்று அமைச்சர் அன்பழகன் கூறியுள்ளாரே?

! 'முறையாகச் சென்றாலும் இத்தனை மெதுவாகவா?' என்று மக்கள் பேச ஆரம்பித்து விட்டார்களே!

● என். கஜேந்திரன், திரவி.

? அரசியல்வாதி நாட்டைச் சுரண்டுவதற்கும் பொதுமக்கள் லாட்டரி சீட்டைச் சுரண்டுவதற்கும் என்ன வித்தியாசம்?

! அவர் சுரண்டிய பிறகு சுருட்டுவார்; இவர் சுரண்டிய பிறகு உதடு பிதுக்குவார்!

● ஆர். சுப்பாராவ்,
திருக்கோவலூர்.

? "எனக்கு எந்த ஆசையும் கிடையாது; அனுபவிக்க வேண்டியதெல்லாம் அனுபவித்து விட்டேன்... முதல்வர் பதவியிலும் இருந்து விட்டேன்..." என்று ஜெ. கூறுகிறாரே – எம்.ஜி.ஆர். ஆத்மா இனி அமைதி அடையுமா?

! அடையாது! முதல்வர் பதவி என்பது யாரும் அனுபவிப்பதற்கு அல்ல... மக்களுக்குத் தொண்டு செய்ய.

● அ. சங்கரன்,பெங்களூர் – 16.

? சாதி வேறுபாடுகளுக்கும் சாதியக் கலவரங்களுக்கும் அரசாங்கமும் அரசியல்வாதிகளும் மட்டுமே பொறுப்பு என்கிறாரே வாஜ்பாய்!

! இவற்றால் அரசியல்வாதிகள் ஆதாயமடைகிறார்கள் என்பது உண்மைதான். ஆனால் சாதி வேறுபாடு என்பது அரசியல்வாதிகளும் அரசாங்கமும் வருவதற்கு முன்பே ஏற்பட்டு விட்டதை மறைக்க வேண்டியதில்லை.

● க. திருசங்கு, குருத்தம்பட்டு.

? சந்திர மண்டலத்துக்குத் தமிழன் போனால் முதலில் என்ன செய்வான்...?

! வேலி போட்டுக் கொண்டு, பாதுகாப்பாக ஒரு கட்சிக் கொடியைப் பறக்க விடுவான்.

● கி. பழனிசாமி,
சென்னை – 59.

? பத்திரிகை கேமராமேனுக்கும் சினிமா கேமராமேனுக்கும் அடிப்படை வேறுபாடு என்ன?

! பத்திரிகையிலிருந்து சினிமாவுக்குப் பயணமாவார்கள்; ஆனால் சினிமாவிலிருந்து யாரும் பத்திரிகைக்கு வர மாட்டார்கள்! மற்றபடி அடிப்படைப் பார்வை ஒன்றாகத்தான் இருக்கும் – இருக்க வேண்டும் – படங்கள் மூலம் கதை சொல்வது.

● எம். பிச்சைக்கனி,
கீழ்வெண்பாக்கம்.

? 'எனக்கும் அற்பகுணம் இருந்திருந்தால், கருணாநிதியைத் தனி நீதிமன்றங்களில் வாழ்நாள் முழுவதும் ஏறி இறங்கச் செய்திருக்க முடியும்... ஆனால் பெருந்தன்மையுடன் விட்டுவிட்டேன்' என்று ஜெயலலிதா கூறுகிறாரே!

! தனி நீதிமன்றம் அமைக்காவிட்டால் என்ன...? விசாரணை கமிஷன் போட்டாரே! அந்தக் கமிஷன் கருணாநிதி மேல் குற்றம் எதுவும் நிரூபணமாகவில்லை என்று சொல்லிவிட்டதே! 'ஜெ' இன்று நடத்துவது முழுக்க முழுக்க கோயபெல்ஸ் பிரசாரம் தான். 'அப்படியென்றால் என்ன...?' என்று கேளுங்கள், இன்னொரு இதழில் பதில் சொல்கிறேன்.

❒ ரூ. 50 பரிசு பெறுபவர் : ஆர். ஜெயசீலன், வெண்காத்தாங்குடி, களப்பால் அஞ்சல், மன்னார்குடி (தாலுகா) 614 710.

● ருக்மிணி குழந்தைவேல், மேட்டுத் திருக்காம்புலியூர்.

? ஒரு நம்பர் - உடனடி லாட்டரியை மத்திய அரசு தடை செய்துள்ளது பற்றி...?

! பாதி கிணறு தாண்டிப் பிரயோஜனமில்லை!

● வி. மோகன், நெல்லிக்குப்பம்.

? பொன்விழா ஆண்டில் விஞ்ஞானிகளின் மகத்தான சாதனை பற்றி...?

! முன்னே போன இன்லாட் செயலிழந்ததன் மூலம் ஆயிரம் கோடி அவுட்டாம்! அட, விடுங்கப்பா! இதிலெல்லாம் வெற்றி - தோல்வி மாறி மாறித்தான் வரும். தவறுகளிலிருந்து தெரிந்து கொண்டுதான் முன்னேற முடியும். எல்லாம் சரி... ஆனால், ஏற்கெனவே மாரடைப்பு வந்த இந்தியப் பொருளாதாரம் தாங்குமா இந்தச் செலவுகளை...?

● எஸ். சாந்தி, காட்பாடி.

? ''இப்போது கூட மக்கள் என்னைத்தான் முதல்வர் என நினைக்கிறார்கள்'' என்று 'ஜெ' பெருமையோடு கூறிக் கொள்கிறாரே?

! ஆம்! ஊழலில் முதல்வர் என்று!...

● என். சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்.

? மத்தியில் ஆட்சி மாற்றம் ஏற்பட்டால் ஜெயலலிதா மீதான வழக்குகளின் போக்கில் மாற்றம் ஏற்படுமா...?

! எந்த ஆட்சி அமைந்தால் என்ன...? ஊழல் செய்யும் இந்திய அரசியல்வாதிகள் தண்டிக்கப்படுவார்கள் என்கிற நம்பிக்கை ரொம்பவும் பலவீனமானது.

● எஸ். சல்மான், பாம்பன்.

? தமிழகத்தில் பல பத்திரிகைகள் ஆபாசத்தைக் காசாக்குகின்றன என்று எழுத்தாளர் பிரபஞ்சன் சாடியுள்ளாரே?

! அவை லாட்டரி சீட்டாக மாறி வருகின்றன என்பதையும் சேர்த்துச் சொல்லியிருக்கலாம்.

● ஆர்.ஜெயசீலன், களப்பால்.

? இந்தியாவில் இத்தனை பேர் உணவுக்காக வாடிக் கொண்டிருக்க, ஆயிரம் டன் உணவு தானியத்தை தான்சானியாவுக்குக் கொடுத்திருப்பது பற்றி உங்கள் கருத்து என்ன...?

! உபரியாயிருந்தது; கொடுத்தோம். இந்தியர்கள் வாடுவது தானியப் பற்றாக்குறையினால் அல்ல... பணப் பற்றாக்குறையால்... பணப் பற்றாக்குறைக்குக் காரணம் வேலையின்மை + அறியாமை!



• பிரசார யுக்தி!



னக்கு முதல் குழந்தை பையனா பொறந்தா அவன் முதலாண்டுக்கு மருதமலைக்கு வரேம்பா முருகா'ன்னு நான் வேண்டியிருந்தேன். அதுக்கு அப்புறம் ஒருதரம் நான் டான்ஸ் மாஸ்டர் குமார் ஊருக்குப் போயிருந்தப்போ அங்க தலித் மக்கள்லாம் சேர்ந்து அய்யப்பன் பூஜைன்னு ஒண்ணை ரொம்ப நல்லா பண்ணாங்க. அதை நான் பார்த்தேன். எனக்கு அது சரியா புரியல்லேன்னாலும், அந்த பூஜை எனக்கு ரொம்பவும் பிடிச்சுப் போச்சி.

'இந்த பூஜை செய்ய மொத்தம் எவ்வளவு செலவாச்சி'ன்னு கேட்டேன்.

"பத்து ரூபா."

எனக்கு ஆச்சரியம். 'அட! பத்து ரூபா தானா?' அங்கேயும் வேண்டிக்கினேன். 'என் பையனோட முதல் வருஷப் பூர்த்திக்கு இங்கே வந்து பத்து ரூபா இல்ல – நூறு ரூபா செலவு பண்ணி இரண்டா பூஜை பண்றேன்."

மருதமலைக்கு நான் பண்ணிக்கிட்ட பிரார்த்தனையையும் மறக்கல்லே.

எனக்கு முதல் குழந்தை பையன்தான். சுகுமார்னு பேரு. ( இப்ப பெரிய ஆளு. ஆனா எனக்கும் அவனுக்கும் ஒத்து வராது. ஏன்னா அவன் வேற கட்சி. நான் வேற கட்சி. நாட்டுக்கு சுதந்தரம் வாங்கிக் கொடுத்த கட்சியின் அபிமானி நான். வாங்கின சுதந்தரத்தைக் காப்பாத்திக்கணுமேன்னு உண்மையா வேலை செய்யற கட்சியில அவன் இப்ப ஒரு முக்கியப் பிரமுகர். நீங்களே புரிஞ்சிக்கிங்க)

வருஷப் பூர்த்திக்கு முன்னாடி குழந்தைக்கு மொத மொதல்ல சாதம் ஊட்டுவாங்க இல்லியா? – அதை எப்படிச் செய்யறது – யாரை வச்சி குடுக்கலாம்னு யோசிச்சோம். 'சரி... எம்.ஜி.ஆரை பழனி மலைக்கு அழைச்சிகிட்டுப் போய் அவரு கையால் குழந்தைக்குச் சாதம் கொடுக்கலாம்னு' நானும், நம்ம தோஸ்த் சின்னப்பா தேவரும் முடிவு பண்ணி அதன் படியே குடும்பத் தோழருடனும், எம்.ஜி.ஆரோடும் பழனிக்குப் போனோம். அப்ப எம்.ஜி.ஆர். நல்ல பக்தர். எம்.ஜி.ஆர்தான் முதல்ல என் குழந்தைக்கு சாதம் ஊட்டினார்.

இதில் என்ன வேடிக்கைன்னா, எம்.ஜி.ஆர். பயங்கர அசைவப் பிரியர். கறி சாப்பாடுன்னா அவருக்கு உயிர். நான் அப்படியே தலைகீழ். மகா சுத்த சைவம்.

ஆனா என்ன ஆச்சன்னா எம்.ஜி.ஆர் கையால சாதம் சாப்பிட்டதாலேயோ என்னமோ, என் பெரிய பையனுக்கு கொஞ்ச நாளைக்கு அசைவம் மேல ஆசை இருந்தது.

அவனோட முதலாண்டு பூர்த்திக்கு ஒரு வாரம் முன்னாடி மருதமலைக்குப் போனோம். கோயம்புத்தூர்ல அப்ப காளியப்பன் டாக்ஸின்னு ரொம்ப பிரபலம். நாலு டாக்ஸி இருக்கும். . சினிமாக்காரங்க அதைத்தான் புக் பண்ணிப்பாங்க. அந்தக் காரை ஏற்பாடு பண்ணலாம்னு போனப்போ அங்க ஒரு குதிரை வண்டிக்காரர் – தெரிஞ்சவர் – பால்கார நாயக்கர்னு பேரு – அவரு வீட்ல ஒரு காலத்தில எம்.ஜி.ஆர்., சக்ரபாணி இவங்கல்லாம் கொஞ்ச நாள் தங்கியிருக்காங்க – அவரு பார்த்துட்டு 'நம்ம குதிரை வண்டியில போலாமுங்கனே...!' அப்படின்னாரு.

"ஆமாய்யா... நீ பழைய குதிரை வண்டி கொண்டு வருவே... நாங்க ஏறினதும் அதில டங்குவார் அறுந்துடும்



வேணாம்''னு நான் சொன்னேன்.

'அட இல்லீங்க.. புது வண்டியா அனுப்பறேங்க...!'ன்னு பால்கார நாயக்கர் ரொம்ப வற்புறுத்தவே சரின்னு அவரு வண்டியே ஏற்பாடு பண்ணேன். மறுநாள் காலையில கிளம்பணும். மருதமலைக்காக வீட்ல டிபன் தயாராகியிருக்கு. விடிஞ்சும் விடியாத விடியற் காலை நேரம். நான் முழிச்சும் முழிக்காம இருக்கற நிலையில் எனக்கு அப்ப ஒரு சொப்பனம்.

**வா** லாங்குளம் பக்கத்தில தேரு பார்க்ன்னு அப்ப இருந்தது. இப்பவும் இருக்

**எம்.என். நம்பியார்**



குன்னு நெனைக்கிறேன். அதுக்குப் பக்கத்திலதான் நான் குடியிருந்தேன். குதிரை வண்டியில நாங்க எல்லாம் போறோம். ரேஸ் கோர்ஸ் ரோடைத் தாண்டி போறப்போ குதிரை வண்டி வழுக்கி கீழே விழுந்துடுத்து.... நான் சட்டென்று முழிச்சி எழுந்து பார்த்தேன். கனவு. சிரிப்புதான் வந்தது.

சரின்னு அன்னிக்குக் காலையில எல்லாம் ரெடியாயி குதிரை வண்டியில மருதமலைக்குக் கிளம்பினோம். வண்டியில முன் சீட்ல என்னோட பாடிகார்டு. யாருன்னு நினைக்கிறீங்க? சின்னப்பா தேவர். 'பெரிய பையனுக்கு ஒரு வருஷம் முடிய ஒரு வாரம் இருக்கு. வண்டியில அவன் இருக்கான். என் மனைவி. என் ரெண்டாவது பையன் அவ வயித்தல. குதிரை வண்டியில பின்னாடி நீட்டா இரு இரும்புக் கம்பி போட்டு அதன் முனை வளைஞ்சி கொக்கியில மாட்டிக்குமே, அந்தக் கம்பியைப் பிடிச்சுக்கிட்டு நான் உட்கார்ந்திருக்கேன்.

வண்டி ரேஸ் கோர்ஸ் ரோடுக்கு வந்தப்ப எனக்கு காலைல கண்ட சொப்பனம் ஞாபகத்துக்கு வந்தது. இங்கேதானே வண்டி விழுந்ததுன்னு நினைச்சிக்கிட்டே இருந்தேன். நாங்க போன வண்டி உண்மையிலேயே அதே ஸ்பாட்ல விழுந்தது. நீங்க நம்ப மாட்டீங்க. ஏன், என்கிட்டவே இது போல யாராவது சொன்னா நானே நம்ப மாட்டேன். ஆனா உண்மையிலேயே கரெக்டா அந்த இடத்தில குதிரை வண்டி விழுந்தது. முன் பக்க வண்டி தரை சாஞ்சிட்டுது. நியாயமா முன்னாடி உட்கார்ந்து இருந்தவங்களுக்குதானே அடி படணும்? ஆனா சின்னப்பா தேவருக்கு ஒண்ணும் ஆகலே. அவரு ஜாலியா எழுந்து என்கிட்ட வந்தாரு. எனக்குதான் முகமெல்லாம் ரத்தம். உதடு கிழிஞ்சி போயிருந்தது. வண்டி விழுந்த வேகத்தில நான் பிடிச்சிகிட்டிருந்த கம்பி மேல வந்து என் வாயை இடிச்சி இவ்வளவு கோளாறு.

'அண்ணே... என்ன ஆச்சு?' - தேவர் கேட்டார்.

'பர்ஸனாலிட்டி பிஞ்சு போச்சு'ன்னேன்.

'டாக்டர்கிட்ட போவலாம்'னு தேவர் பதபதைத்தார். "அதெல்லாம் ஒண்ணும் வேணாம்... நம்ம பிளானை மாத்தக் கூடாது. வண்டியை திரும்பவும் கட்டச் சொல்லுங்க... கோவிலுக்குப் போவலாம்."

'அதெல்லாம் முடியாது. டாக்டர்கிட்டதான் போவணும்'னு மெஜாரிட்டி முடிவு பண்ணப்புறம் நான் என்ன செய்ய முடியும்?

அப்ப 'வேலைக்காரி' படத்தில ஒரு டூயட் ஸாங். ஷூட்டிங் எடுக்க வேண்டி இருந்தது. 'சிங்காரப் பண்பாடுவோம், சரச சிங்காரப் பண்பாடுவோம்'னு நானும் எம்.வி. ராஜம்மாவும் ஒரு பாட்டுப் பாடுவோம். அது பாக்கி. உண்மையில அந்த் ஸாங் ஏற்கனவே எடுத்தாச்சி. ஆனா ட்யூன் சரியா இல்லேன்னு நானும் எம்.வி. ராஜம்மாவும் ஃபீல் பண்ணி அதை முதலாளிகிட்ட சொன்னோம். 'இதுக்குனு மியூஸிக் டைரக்டர் சுப்பாராவை மெட்றாஸ்ல இருந்து வரவழைக்கணும்'ன்னு தயங்கினார். 'நம்ம எஸ்.எம். சுப்பையா நாயுடுதான் இருக்

# நான் வில்லன் அல்ல!



காரே'ன்னு நாங்க சொல்ல, வேற ட்யூன் போட்டு தயாரா இருந்தது. அது ஷூட் பண்றதுதான் பாக்கி. இப்படி ஒரு ஹீரோ ஹீரோயின், பாட்டோட ட்யூன் பத்தி சொல்லி மாத்தினது தமிழ்த் திரையுலகத்துல இதுவரைக்கும் நடக்கல்லேன்னு நினைக்கிறேன்.

வீட்டுக்கு வந்ததும் சின்னப்பா தேவரை ஒரு சைக்கிள்ல சென்ட்ரல் ஸ்டூடியோவுக்கு அனுப்பி கார் இருக்கான்னு பாத்துட்டு வர அனுப்பினேன். அங்கே கார் இல்லே. விஷயத்தை தேவர் அங்க சொல்லிட்டு வந்தார்.

மெயின் ரோட்ல இருந்த கிளினிக் சாத்தியிருந்தது. இதுக்குள்ள ரெண்டு மூணு காருங்க சர்... சர்...ன்னு வீட்டாண்ட வந்தது. முதலாளிங்க காரு. சோமு அண்ணன், அவரு பார்ட்டனர் எல்லாம் வந்துட்டாங்க. டயட் லாங் எடுக்கணுமேங்கற கவலை அவங்களுக்கு.

அப்புறம் ஏதோ ஒரு டாக்டர்கிட்ட போனேன்.

இதனால என்ன ஆச்சுன்னா குமார் ஊருக்குப் போய் நூறு ரூபா செலவு பண்ணி அய்யப்பன் பூஜையை சிறப்பா செய்யணும்னு நெனைச்சிருந்தேன் இல்லையா. அந்த ஆசை நிறைவேறாம போச்சு. பையனோட முதல் வருஷப் பூர்த்திக்கு மருதமலை வரேன்னு வேண்டிகிட்டிருந்தேன் இல்லியா, அதை நிறைவேத்தலாம்னு டாக்ஸி ஒண்ணு அரேஞ்ச் பண்ணினேன். காளியப்பன் டாக்ஸிதான். அது ஏக மக்கர் பண்ணிச்சி. பஞ்சர் ஆகி ஸ்டெப்னி மாத்தி போட்டோம். கொஞ்ச தூரம் போனதும் அதுவும் பஞ்சர். அப்பதான் எனக்கு சட்டுன்னு ஒரு பொறி தட்டிச்சி. அதாவது அதே டேட்லதான் அய்யப்பன் பூஜை பண்றதா நான் வேண்டிக்கிட்டிருந்தேன். சரி, நம்மை சோதிக்கிறார்னு ஒரு வழியா மருதமலைக்குப் போய்ச் சேர்ந்தோம். இப்ப இருக்கிற மாதிரி பக்தர்களுக்கு வசதியெல்லாம் அப்ப கிடையாது.

**நா**ன் போனப்போ, கூட சின்னப்பாவும் இருந்தாரு.

பூசாரிக்கு பணம் கொடுக்கலாம்னு பார்த்தா என் பர்ஸைக் காணோம்.

சின்னப்பாவைக் கேட்டா, நீங்க அர்ச்சனை தட்டு வாங்க எங்கிட்ட பர்ஸ் கொடுத்திங்க. நான் தேங்கா பழம் வாங்கினதும் திருப்பிக் கொடுத்திட்டேனே'ன்னார்.

ஆமாம், அதுவும் சரிதான். அப்ப எங்கே போச்சு?

எங்க கூட சமையல்காரன் ஒருத்தன் இருந்தான். அவன்கிட்ட விவரம் சொல்லி, நீ கீழே போய் கார் டிரைவர்கிட்ட அவரு பாத்தாரான்னு கேளு'ன்னு அனுப்பி வச்சேன்.



சின்னப்பா தேவர்கிட்ட சில்லரை வாங்கி பூசாரிக்குக் கொடுத்துட்டு நானும் கீழே இறங்கி வந்தேன்.

"என்னடா, கிடைச்சுதா?"

"இல்லியே"ன்னான், நான் அனுப்பியவன். அப்புறமா டிரைவரைக் கேட்டேன்.

'இல்லியே ஸார்'னு சொன்னப்போவே அவன் மூஞ்சியில ஏதோ சலனம் இருந்த மாதிரி எனக்குப் பட்டது. 'சரி... சரி... பர்ஸைக் கொடுப்பா'ன்னு நான் நேரிடையா கேட்டதும் மறச்சி வச்சிருந்த பர்ஸை எடுத்து எங்கிட்ட கொடுத்திட்டான்.

காருக்குள்ள ஏறி உட்கார்ந்தோம். அப்பதான் டிரைவர் ஒரு விஷயத்தைக் கவனிச்சான். காருக்குள்ள வச்சிருந்த டிரைவிங் லைசென்ஸ், 'சி' சர்டிபிகேட் இதெல்லாம் காணோம். கடைசியில என்ன ஆயிருந்ததுன்னா, என் பர்ஸ் காருக்கு வெளியே விழுந்திருந்ததைக் கவனிக்காம, வெளியில மாடு மேய்ச்சிக்கிட்டிருந்த சில பசங்க டிரைவரோட லைசன்ஸ், சர்டிபிகேட்டை எடுத்துப் போயிட்டாங்க. கண்ணிலே பட்ட பர்ஸை இவரு எடுத்துப் போட்டுக்கிட்டாரு.

எனக்கு இவ்வளவு சோதனைங்க ஏன்னு கேட்டா எம் மேல முருகருக்குக் கோபம். "ஏன்டா ராஸ்கல்! நீ எங்கிட்ட வேண்டிகிட்ட. நானும் உனக்கு ஆம்பிளைக் குழந்தை அனுக்கிரகம் பண்ணேன். இவ்வளவு செஞ்சிருக்கேன் உனக்கு. நீ என்னடான்னா என் தம்பி (அய்யப்பன்) கிட்ட போயி அங்கேயும் வரேன்னு வேண்டிகிட்ட இல்ல." அதுதான் கோவம். குதிரை வண்டியை விழ வச்சி என் உதடைக் கிழிச்சார் இல்லியா?

இப்படி சின்ன விஷயத்துக்கெல்லாம் கடவுளுங்ககூட சண்டை போட்டுக்குவாங்க போலிருக்கு. சும்மா ஒரு பேச்சுக்காகத்தான் நான் கடவுளுங்க சண்டை போட்டுப்பாங்க போலிருக்குன்னு சொன்னேனே தவிர, உண்மையில நான் கத்துகிட்ட பாடம் ஒண்ணு இருக்கு.

'ஒரு விஷயம் முடிவு பண்ணிட்டா, அதில உறுதியா இருக்கணும். சலனப் படக்கூடாது' - இதுதான் அந்தப் பாடம்.

**எ**ம்.ஜி.ஆரோட நான் பழகிய நாட்கள்,

**"வழக்கமாக சம்பளப் பணம் இரண்டாயிரம்தானே தருவீங்க? இந்த மாசம் என்ன மூவாயிரத்தை நீட்டறீங்க?"**

**"ஒரு நம்பர் லாட்டரிக்கு அரசு தடை விதிச்சிட்டதால் ஆயிரம் ரூபாய் மிச்சமாயிட்டுது, கமலா!"**

**— உ. ராஜாஜி**

---

எங்களுக்குள்ள இருந்த ஆழமான நட்பு இதெல்லாம் எனக்கு ரொம்ப இனிமையான நினைவுகளா என்னிக்குமே இருக்கும். பல பேர் மாதிரி நான் அந்த நட்பை விளம்பரப் படுத்தி லாபமடைய விரும்பியதில்லை. ஒரு வருஷமா ரெண்டு வருஷமா? நான்தான் சொல்லியிருக்கேனே அவர் ராம்சந்த்ரா இருந்த காலத்தில இருந்து பழக்கம்னு.

அபிமன்யு, மோகினி படங்களில நடிச்சப்போ எம்.ஜி.ஆர் ஏற்கனவே தான் இருந்த வீட்டைக் காலி பண்ணிட்டாரு, ரொம்ப செலவு ஆகுதுன்னு. அப்ப அவருக்கு குறைஞ்ச சம்பளம்தான். வீட்ல அப்போ அவரோட மனைவிக்கும் உடம்பு சரியில்ல. அண்ணன் குடும்பம் பெரிசு. இப்படிப் பல விஷயங்கள்.

'என் வீட்ல வந்து தங்கிக்குங்க'ன்னு நான் அவரைக் கேட்டுக்கிட்டேன்.

"உங்களுக்கு எதுக்கு கஷ்டம்?'ன்னாரு எம்.ஜி.ஆர்.

'பரவாயில்லை என்னால உங்களுக்கு எலும்பும் முள்ளும் போட முடியாதுதான். ஆனா இலையும் புல்லும் போட முடியும். சுத்தமான சாப்பாடு'

அவருக்கு என்னன்னு 'சட்'னு புரியல்ல.

'அட, அதாங்க. நீங்க மாமிச பட்சணி. நான் சாக பட்சிணி! அதைச் சொன்னேன்!'

எங்களுக்குள்ள இருந்த நட்பின் காரணமா நான் அந்த உரிமையை எடுத்துகிட்டு அவரை அழைச்சேன். அவரும் வந்து என்னோட கொஞ்ச நாள் இருந்தாரு.

இதுல என்ன வேடிக்கைன்னா, பின்னால எம்.ஜி.ஆர் பெரிய ஸ்டாரா ஆயி, மிகப் பெரிய பதவிக்கு வந்தபோது நான் சொல்றேனே, அந்தக் காலத்தை குறிப்பிட்டுச் சொல்லி, 'அப்போ எம்.ஜி.ஆர். என் வீட்லதான் தங்கியிருந்தார், தெரியுமோ?' அப்பமன்னு பல பேர் பெருமை பேச ஆரம்பிச்சாங்க.

எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருக்கும். 'அப்ப நம்ம வீட்ல வந்து தங்கின எம்.ஜி.ஆர் யாராயிருக்கும்னு' நெனச்சி சிரிச்சிப்பேன்.

ஒருவேளை ஒரே படத்தில ரெட்டை ஹீரோ வேஷம் போடற மாதிரி பல ரூபங்கள் எடுத்து ஒரே சமயத்தில் எல்லாரோட வீட்லேயும் இருந்திருப்பாரோ! என் வீட்ல தங்கினது டூப் எம்.ஜி.ஆரோன்னு எனக்கு சந்தேகம் கூட வந்தது.

பல விஷயங்கள்ல எம்.ஜி.ஆர். எனக்கு குருவா இருக்க எல்லாத் தகுதியும் கொண்டவர். ஆனா குறிப்பா ஒரு விஷயத்தில அவர்தான் என்னோட குரு.

இருபத்தெட்டு வயசு வரைக்கும் எனக்குச் சீட்டாட்டம்னா என்னன்னே தெரியாது.

ஆனா எம்.ஜி.ஆரும் மத்தவங்களும் காசு வச்சு சீட்டாடுவாங்க. விடிய விடிய ஆடுவாங்க.

'யோவ்.... தப்புய்யா இது. சீட்டு விளையாடறது தப்பு. நீங்க காசு வேற வச்சி ஆடறீங்க. ரொம்பத் தப்பு'ன்னு அவங்களை இம்சை பண்ணிக்கிட்டே இருந்தேன். அவங்களுக்கு என்னோட நட்பையும் விட்டுட மனசில்லே. அதேசமயம் என்னோட இம்சையும் குறையணும்.

பாத்தாங்க. ஒரு அருமையான ஐடியா பண்ணாங்க.

எனக்கு எம்.ஜி.ஆர், சீட்டாட கத்துக் குடுத்துட்டார். என்னை சீட்டாட்டக்காரனா கெடுத்து வச்சது அவருதான்.

எம்.ஜி. சக்ரபாணி காசு வச்சு ஆட மாட்டார்.

'வாய்யா... உட்கார்...'னு அவர் என்னை உக்கார வச்சு அவரு பங்குக்கு சொல்லிக் கொடுத்தார்.

நான் கத்துக்குட்டியா இருந்தப்ப ஒருநாள் பாலையா வீட்ல சீட்டு ஆடக் கூப்பிட்டாங்க.

'நான் வரலை'ன்னு இருந்தேன். 'நான் கூட வர்றேன் ஸார்'ன்னு என்னோட மறைந்த நண்பர் சந்தானம் – பாசமலர் எடுத்தாரே – அந்த சந்தானம் – தைரியம் கொடுத்தார்.

அன்னிக்கு காசு வச்சி ஆடினதில எனக்கு இருபத்து நாலு ரூபா லாபம். சந்தானத்துக்கு பன்னிரண்டு ரூபா கொடுத்துட்டு மீதி பன்னிரண்டு ரூபாயை நான் வச்சிக்கிட்டேன்.

முதல் நான் லாபம் கிடைச்சாத்தானே மனுஷன் முழுசா கெட்டுப் போவான்!

அப்புறம் எம்.ஜி.ஆர். முதலமைச்சரா ஆன பின்னாடிகூட அடிக்கடி கூப்பிடுவார்.

நான் எப்போவாவது ஒருதரம்தான் போவேன். 'சும்மா வந்து உங்க வேலைய கெடுக்க விரும்பல்ல. ஒண்ணு செய்யுங்களேன். ஊட்டிக்கு ரெஸ்ட் போல ஒரு வாரம் எந்தத் தொந்தரவும் இல்லாம வாங்களேன். அப்ப அங்கே ஆடலாமே'ன்னு நான் சொன்னேன்.

ஒருநாள் நான் ஊட்டியில இருந்தப்ப உண்மையிலேயே சி.எம். எம்.ஜி.ஆர். கிட்டேயிருந்து போன்கால்.

(தொடரும்)

# அப்பாவாகி...

"அப்பா... போய் விட்டாயா அப்பா...!"

திருப்பேரூர் பட்டீஸ்வரர் ஆலயத்தின் பதினெட்டாம்படி முட்ட ஓடும் நொய்யலின் தீவிரத்தில் அப்பாவின் அஸ்திக்கலசம் கரைந்து வெகு நேரமாகி விட்டிருந்தது.

ஊமையாய் உள்ளுக்குள் இறுகி நின்ற அழுகை மட்டும் இன்னும் கரையவில்லை.

அப்பாவின் அஸ்தி போலவே பலரின் 'அஸ்திக்கலசம்', தர்பைப் புல், மலர் மாலைகள்... ஆற்று நீருக்குள் கரைந்து, உருண்டு, புரண்டு...!

மேல் படித்துறையில் குத்துக்காலிட்டு அமர்ந்திருந்தவனின் கால்களைத் தழுவி, இடுப்புத் துண்டை மேலும் ஈரமாக்கி விட்டு ஓடியது நதிநீர்.

தன் புறப்பரப்பின் ஈரம் கூட உணரா வண்ணம் உள்ளம் முழுக்க விரவி நிற்கிறது சோகம். வாழ்க்கையில் இழக்கக் கூடாத ஒன்றை இழந்து துடிக்கிற உயிர்த்துடிப்பு. திரும்பக் கிடைக்காத பேரிழப்பு...

சுழித்து ஓடும் ஆற்றின் செந்நீருக்குள் அதைவிடப் பெருஞ்சுழிப்பாய் அப்பாவின் திருவுருவம்... வெள்ளையாய் முகிழ்ந்து நிற்கும் தாடி. நெற்றி நிறைய துவளும் சுருக்கம். கண்களில் மங்கலாய் மின்னும் வெளிச்சம். வெளிச்சத்தில் சிவக்கும் ஆக்ரோஷம். அந்த ஆக்ரோஷத்திலும் மின்னி மறையும் ஒரு துளி சோகம்... அந்த ஒரு துளி சோகம்தான் இப்போதும் நெஞ்சில் ஏறி உட்கார்ந்து இம்சிக்கிறதோ...?

பத்து வயசு வரைக்கும் பாசம் காட்டி, பதினெட்டு தாண்டியதும் குதர்க்கம் பேசி, திருமணம் முடிந்து குடும்பமானதும் தான் பெற்ற மகனே தனக்கு எதிரியானது – எதிரியாக பாவித்தது அப்பாவிற்கு மட்டுமே சாஸ்வதமானதா...? இல்லை, எல்லோருக்குமேவா...?

ஆற்றுநீரின் அலைக்கழிப்பை விஞ்சும் மனத்தின் சுழற்சி.

**மா**மாவின் ஒரேயொரு பொய் அப்பாவை எப்படியெல்லாம் மாற்றி விட்டது. எல்லாமே தன் மகனாகி நின்ற அந்தத் தந்தை மாறிப் போனதெல்லாம் இவன் திருமணத்திற்குப் பின்தான். 'பிறகு போடுகிறேன்...' என்ற நகை, 'பி.எஃப். வந்ததும் கொடுக்கிறேன்...' என்ற வரதட்சணை, பாசத்தையே பஸ்பமாக்கி, உறவுகளைத் தூக்கியெறிந்து, மனுஷத்தனத்திலிருந்தே விலகி...

"இத பாருடி... அவனுக்கு அவன் பொண்டாட்டிக்கு சேர வேண்டிய நகை வேணும்னா முக்கியமில்லாமப் போகலாம்... ஆனா எனக்கு அவ அப்பன் கொடுக்க வேண் டிய 'டௌரி' முக்கியம்...!"

"அதுக்கு என்னைய என்ன பண்ணச் சொல்றே...?"

"பணத்தைக் கொண்டு வந்தா வரட்டும்... இல்லே, அவளை அவ அப்பனூட்டுக்கு ஓட்டி விடச் சொல்லு...!"

"ஓட்டி விடறதுக்கு அவ என்ன மாடா... எருமையா...? இதையெல்லாம் எங்கிட்டேவே சொல்லாட்டி அவன்கிட்டவே சொல்றது...!"

"நீயும் அவன் வர்க்கந்தாண்டி... நீ மட்டும்

## அருள்வாக்கு



பாப புண்யத்துக்குக் காரணம் என்ன? அவற்றைச் செய்யாமல் நிறுத்த இஷ்டமிருக்கிறது; ஆனால் முடியவில்லை. ஒரு மரத்தை தழைக்காமற் செய்ய வேண்டுமானால் கிளைகளை வெட்டினால் முடியாது; அடி மரத்தை வெட்ட வேண்டும். வீட்டுக் கூரையிலே திரும்பத் திரும்பக் கரையான் புற்று உண்டாகிறது என்றால் மேலெழுந்த வாரியாக அந்தக் கூட்டைப் பெயர்த்தால் போதுமா? போதாது. இன்னோரிடத்தில் புற்று முளைக்கத்தான் செய்யும். கரையான் வைக்கும் தாய்ப்பூச்சியைப் பிடித்து அழித்தால்தான் புற்று எங்கும் எழும்பாமலே போகும். அதுபோலப் பாபத்துக்கு மூல காரணத்தை அறிந்து அதையே அழிக்க வேண்டும். பாபத்துக்கு மூலம் என்ன? கெட்ட காரியத்தினுடைய பலன்தான் பாபம். கெட்ட காரியம்தான் பாப மூலம். கெட்ட காரியம் எதனால் செய்கிறோம்? நமக்கு ஒரு வஸ்து வேண்டும் என்ற ஆசையிருக்கிறது. அதை அடைவதற்குக் குறுக்கு வழிகளிற் போகிறோம். அது பாபம். அதாவது, பாபம் செய்யக் காரணம் ஆசை. ஒரு வஸ்து அழகாக இருந்தால் ஆசை உண்டாகிறது. நல்ல பதார்த்தங்களைக் கண்டால் நமக்கு வேண்டுமென்று ஆசை தோன்றுகிறது. அது நல்லது என்ற இச்சை

எம் பக்கம் எப்படிப் பேசுவே...? என்னை உன் அப்பன் ஏமாத்தினான், எம் மகளை உம் பொறவி ஏமாத்தறான்... ஏமாத்தறதுக்குன்னே பொறந்தவங்கதாண்டி நீங்கெல்லாம்...!"

"இதா... என்னைப் பேசு... என் வர்க்கத்தைப் பேசுனே...!"

"என்னடி செய்வே...? குடலை எடுத்துடுவியோ... எடுடி பார்க்கலாம்...!"

– நெட்டித் தள்ளும் வேகத்தில் உருளும் அம்மா.

இனியும் தாமதித்தால் ஆபத்து என்று எழுந்து ஓடிவரும் இவர்கள்... அப்பாவைத் தள்ளி... அம்மாவைத் தாங்கி...

"ஆத்தாளும் மகளும் ஒண்ணு சேர்ந்துட்டு ஆடறீங்களாடா... டோய்... வெட்டிப் போடுவண்டா வெட்டி.... ஒரே ஊட்ல பூட்டி கொள்ளி வச்சிருவண்டா...!"

– இவர்கள் வருகைக்காகவே காத்திருந்தது போல் வேட்டி அவிழ ஆட்டம் போடும் மனுஷன்... குடியிருக்கும் குடித்தனக்காரர்கள் ஓடிவந்து சமாதானப்படுத்தினாலும் அடங்க மாட்டார்.

பெத்தவன் ஏன் இப்படி நடந்து கொள்கிறான் என்று உரசிப் பார்க்காத நாட்களில்லை.

நாட்கள் மாதங்களாய்... வருடக்கணக்கில்... வீட்டிலேயே தனியாகவும்... வேறு வீட்டிற்குப் போனால் அவமானம் என்று சொந்த வீட்டிற்கே வாடகையும் கொடுத்து இருந்து பார்த்தும் பலனில்லை.

தான், தனது என்கிற அகந்தை அப்பாவிற்குக் கூடியதேயொழியக் குறையவில்லை. வயசு ஏற சுகர், பி.பி, கிட்னி ட்ரபிள், ஹார்ட் பெயிலியர் என்று நோய் நொடிகள் அமுத்த, புத்தியோ பேதலித்துப் போனது.

'எம் பேச்சைக் கேட்காத எவனும் என்னூட்ல இருக்கப்படாது...!' அடிக்கடி பிதற்றும் வார்த்தைகள். "அவனவன் சம்பாதிச்சுக் கையூனிக் கரணம் பாஞ்சு சம்பாதிச்சா தெரியும் சேதி.. வரதட்சணை வாங்க மாட்டானாம், சீர் கேட்க மாட்டானாம்... பெரிய சீர்திருத்தவாதி.. போறது கூலிக்கு... அப்பனூட்ல இருந்துட்டு பெருமை வேற...!"

– பொறுமுவதிலும், சவால் விடுவதிலுமாய் தொடர்ந்த பிரச்னை அவர் இரத்தத்தில் மிதக்கிற வரை – தூரமாய் வேறு வீடு பார்த்துப் போவது வரை நீடித்தது.

அன்றும் அம்மாவிடமிருந்துதான் பிரச்னையை ஆரம்பித்தார்.

"அவன் கொடுக்கிற முன்னூறு ரூபா பத்தாது.... மாசம் ஐந்நூறு கொடுக்கச் சொல்லு...!"

ஏற்கெனவே நான்கு மாதமாய் 'ஆர்டர்' இல்லாது வேலையற்று சும்மா படுத்துக் கொண்டிருந்தவனின் நெஞ்சில் கனன்ற விரக்திச் சூட்டிற்கு மேலும் தூபம் போடுவதாய் இருந்தது அவரின் பேச்சு.

எடுத்த எடுப்பிலேயே இவனால் வந்த கோபத்தை அடக்க முடியவில்லை.

"அவர் சேர்த்தி விட்ட வேலைக்கி ஐநூறு என்ன, ஆயிரமா கொடுத்துட வேண்டியதுதான்...!"

– அடக்கிப் பார்த்தும் அடக்க முடியாது வெளிவந்தது இவன் குரல்.

"நான் வேலைக்கி சேத்தி உடாட்டி என்

உண்டாகிறது. இந்த இச்சையைப் பூர்த்தி பண்ணக் காரியங்கள் செய்கிறோம். இந்திரியங்கள் ஒன்றை அழகானதென்று அறிவது தான் ஆசைக்குக் காரணம்.

இத்தனை நாழி நான் சொன்னதிலிருந்து ஏற்படுவது என்னவென்றால்:

நாம் செய்யும் பாபத்துக்கு உடம்பு தண்டனை. பாபத்துக்கு மூலம் கெட்ட காரியம். கெட்ட காரியத்துக்கு மூலம் ஆசை. ஆகையால் நம் கஷ்டம் அனைத்துக்கும் மூல காரணமாகிய ஆசையை நிவர்த்தி பண்ணினால் தான் நிரந்தரமான துக்க நிவர்த்தி உண்டாகும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

ணடா... உம் மாமனாரத்தான் பாவம் பாவம்ன்னு ஆயிரம் பாவம் போடறியே... ரோஷமுள்ளவன்... அந்த நாயி வீட்ல போய் இருடா...! சீர்திருத்தம் பேசறவன் அரசாங்கத்துல போய் கேட்கிறது வேலை... எதுக்குமே துப்பு கெட்ட நாயி... பேச வந்துட்டான்...!"

"இதோ பாரு... நாயி கீயின்னா கெட்ட கோபம் வந்திடும்..."

"என்னடா செய்வே... தலையை எடுத்துடுவியா... ம்... எடுடா... அமடா... அமடா பாக்கலாம்...!"

– தலையை சிலுப்பிக் கொண்டு கிட்ட வந்து நிற்கும் அவரிடம் அதையும் மிஞ்சி தண்ணி வாசம்.

"ஓ... காலையிலேயே தண்ணியடிச்சுட்டு தான் இந்த ஆட்டமா...?"

"ஆமாண்டா... நா ஆடுவேன்... என் காசுல நா ஆடுவேன்... குடிப்பேன்... சம்பாதிச்சதை சூறையாடுவேன்... நீ யாருடா கேட்கிறதுக்கு...?"

"ம்... உம் பொண்டியக் கேளு... தள்ளிப்போ... தண்ணி வாசம் தாங்கலே...!"

– இவன் தள்ளிவிட்ட வேகத்தில் தட்டுத் தடுமாறி விழப்போனவர்,

"திமிரு புடிச்ச நாயி... என்னூட்லயே இருந்துட்டு என்னையே கை வச்சுட்டியாடா டோய்... உன்னைய... இன்னெய்க்கு கண்ட துண்டமா வெட்டாம விட மாட்டேன்டா...!"

– துள்ளிக் கொண்டு ஓடினவர் பரணியிருந்த கொடுவாளை உருவினாரோ இல்லையோ, அதைப் பிடுங்க இவன் ஓடினான். மனைவி இவனைத் தடுக்க, அம்மா அவரைத் தாவிப் பிடிக்க...

"...' சிறுக்கி மகளே... பையனுக்கு சொல்லிக் கொடுக்கறதையும் கொடுத்துட்டு நடிப்பாடி நடிக்கிறே... அப்பனைப் போலத்தான இருப்பா மகளும்... இருடீ முதல்ல உன்னை வெட்டறேன். அப்புறம் உம் புருஷனை... ஒங்கொப்பனையும் வெட்டுவண்டீ...!"

– அவர் ஆடின வேகத்தில் தூக்கி வந்த கொடுவாள் பிடி கழன்று அவர் தலையிலேயே விழுந்து இரத்தம் கொப்பளிக்க இவன் அப்படியே ஆடிப் போனான்.

'ஐய்யோ... முறையோ...!'வென அம்மாவின் கூப்பாடு. 'அய்யோ... மாமா...!'வென மனைவியின் அலறல்... நிமிஷ நேரத்தில் மனசு பிரமை தட்டிப் போனது. என்ன தோன்றியதோ...

"அப்பா...!" கோபம் மறைந்து உணர்ச்சி மேலிட அப்பாவைத் தாங்கிப் பிடிக்க ஓடினான். அவரோ பெருங்குரலெடுத்துக் கத்தினார் :

"என்னை... தொடாதேடா நாயே... ஏய்... முதல்ல அவனை வெளிய தொரத்துடீ... தலைக்கொள்ளி... இவனை இனியும் வீட்ல வச்சிருந்தேன்னா எனக்கு உசிரோடவே கொள்ளி வச்சிருவான்... இனி இவன் எம் புள்ளையுமில்லே... நா அப்பனுமில்லே...!"

– பல்லைக் கடித்துக் கொண்டு, நெற்றியில் இரத்தம் வழிய அப்போதும் அவர் பேசின பேச்சு... ஆடின ஆட்டம்... வீதி ஜனம் மொத்தமும் கூடி விட்டது.

மனசு மொத்தமும் கல்லாகிப் போனது அந்தக் கணங்கள்தான்... மனிதனை மிதித்தால் தாங்கலாம். உள்ளூர ஜொலிக்கும் பரிசுத்த ஆன்மாவையே குத்திக் கிழித்தால்...

தனிக்குடித்தனம் கண்ட இந்த நான்கைந்து வருடக் காலச் சுழற்சியில் எல்லாமே கரைந்து போனதா...?

**அ**வருக்காக...

ஆன்மாவையே ஹிம்சித்த அவருக்காக ஏன் அழவேண்டும்...? அடுத்தடுத்து பொங்கும் கேள்விகள்...

என்றாலும் அப்பாவுடன் விட்டேர்த்தியாய்ப் பேசுகிற அளவு, அவருடன் கைகலக்கிற அளவு... அவரை விட்டு... சொந்த வீட்டை விட்டு வெளியேறுகிற அளவு அவர் செய்த தவறுகள் பெரிய தவறுகளாய்த் தோன்ற மறுப்பது எதனால்...?

தான்தான் தவறு செய்து விட்டேனோ...? அப்பாவை விட்டுப் பிரிந்தது தன் தவறோ...?

படித்திருந்தும் அப்போது புத்தி கெட்டுப் போய் விட்டேனோ...? அப்பாவுடன் கிட்ட இருந்திருந்தால் இன்னும் உயிருடன் இருந்திருப்பாரோ...?

காட்டுக்குப் போவதும், சோகத்தில் மாள்வதுமே இராமகாதை தொட்டு அப்பாவுக்கும் பிள்ளைக்குமான ஒட்டு உறவோ...? காரணங்கள் வேறாகலாம். செயலைப் பொறுத்தவரை... எல்லாம் ஒன்றுதானே...? பத்து வயசு வரைக்குமே ஆரத்தழுவி... தோளில் சார்த்தி நெஞ்சோடு கொஞ்சும் அந்தக் கரங்கள். தாடை முட்கள் குத்த கன்னத்தோடு கன்னமாய் இழையும் வருடல். மகனுக்குப் பதிலாய் புத்தகப் பையைத் தூக்கிக் கொண்டு இன்னொரு கரத்தில் மகனின் பூங்கரத்தைப் பற்றியபடி நடந்த நடை. பிள்ளையை தன் வாரிசுக்கு எடுக்கவில்லையென்று மில் யூனியன் தலைவர்களுடன் சண்டையிட்ட கோலம்....

எல்லாமே தன் மகனாகி நின்ற அந்த அப்பாவை நாம் எங்கே எப்போது தவற விட்டோம்...? எப்படி மறந்து போனோம்...?

இது என்ன அலங்கோலம்...? முன்னும் பின்னுமாய் முரண்பட்டு..

இந்த முரண்பாட்டிற்கு அப்பாவின் மீது தன்னையறியாமல் உள்ள அபரிமிதப் பற்றுதான் காரணமோ...? உள்ளுக்குள் புதைந்து அமிழ்ந்து கிடந்த பாச உணர்வுகள் இப்போது பீறிட்டுக் கிளம்புகின்றனவோ...? அல்லது மனிதன் இறப்பிற்குப் பின் நல்வினை நிலைத்து தீவினை அகன்றிடும் நிலைப்புத் தன்மையின் நிலையாமைச் சுகமோ...?

இல்லை...

அப்பாவின் மீது தவறில்லை.

எல்லாம் நான்தான்...




**"உங்க 'விவசாய' நிகழ்ச்சிக்கு ஏக வரவேற்பு இருக்கே, எப்படி?"**

**"வேறொண்ணுமில்லே, 'சம்பா' பயிருக்கு ஊடு பயிரா, சில 'ரம்பா' கிசுகிசுவும் சேர்த்துச் சொல்றோம்..."**

**— நெய்வேலி ஜீவி**

அப்பாவைக் கொன்ற பாவி நான்தான். அவர் புத்தி பேதலித்த அந்திம காலத்தில் கிட்ட இருந்து பணிவிடை செய்யாது எட்டப் போய் குடித்தனம் நடத்தின நான் பாவி...!'

நினைத்த மாத்திரத்தில் உள்ளத்தின் வெம்மை வெடிக்கிறது. 'ஓ'வென்று கத்திக் கதற வேண்டும் போல உணர்ச்சிப் பிரவாகம்...

அப்போது –

"தம்பீ..."

– பின்புறமிருந்து ஒரு குரல். திரும்பிப் பார்க்கிறான் சுந்தரேசன். கண்களில் நீர் திரையிட்டு மறைக்கிறது.

தடியூன்றி எதிரில் அமரும் அந்தப் பெரியவர் நிர்மலமாய்... நெற்றியில் பட்டை பட்டையாய் திருநீறு. கழுத்தில் உத்திராட்சம், முழங்கால் வரை நீண்ட வேட்டியில் மஞ்சளும், குங்குமமும், திருநீறும் படிந்த படிமம்...

"சாமீ.. நீங்க...?" – இவன் கேள்வியை அவர் சட்டைசெய்யவில்லை.

"கடைசி காலத்துல தகப்பனார் என்னடா அப்படி நடந்துகிட்டார்னு அழுறே.. பாசத்துலயும், நேசத்துலயும் துடிக்கிற... அப்படித் தானே...?"

பளீரென்று சிரிக்கும் காவியேறின பற்கள். இவன் நா ஏனோ மடியவில்லை.

"தம்பீ... அந்திம காலத்துல மனுஷா எல்லோரும் இப்படித்தான்.... காலம் பூரா நல்லது செஞ்சு வந்த மனுஷா கெடுதல் செய்யறதும், கெடுதியே செஞ்சு வந்தவா நல்லதா நடந்துக்கறதும் அந்த பகவானோட செயல். எனக்கும் அதுதான்... உனக்கும் அதுதான்... துக்கம் தாளாதில்லையா...? ரொம்ப வெறுத்திடக் கூடாதில்லையா...? இப்ப உன்னையே எடுத்துக்க... உன் தகப்பனார் அந்திமத்துல அவ்வளவு அழிச்சாட்டியம் பண்ணிப் போனதுலயே இப்படி இடிஞ்சு போயிட்டியே... எப்பவும் போல நல்லதே செஞ்சிருந்தார்ன்னா... துக்கத்துல கூடவே உயிரை விட்டிருப்பே...! இப்பவும் உன் அப்பா பக்கத்துல இருக்கார்னு நினை... காற்றா, நீரா, நீயா, நானா...!"

– அவர் சொல்லிச் செல்ல இவனுக்குள்ளிருந்த ஏதோ ஒரு பனித்திரை விலகினாற் போல்... ஏனோ கண்களுக்குள் மறுபடியும் நிறைந்து நீள்கிற அப்பா... பழைய 'அப்பாவாகி...', ஆரத்தழுவுகிற... நெஞ்சோடு கொஞ்சுகிற... புத்தகம் சுமக்கிற... இருந்த ஒரு துளி ஆக்ரோஷமும் மறைந்து கனிவாய்... கனிவு நிறைந்த சிரிப்பில்...

"அப்பா... போய் விட்டாயே அப்பா...!"

ஆற்றுநீர் சலனமற்றுப் புரண்டது.

# விவாகரத்து ரத்து!

**அநேகமாக இவர்தான் நம்மூரில் முதல் தொழில்முறை பெண் வீடியோகிராபராக இருக்கக்கூடும். பெயர் லட்சுமி சீனிவாசன். பொது விழாக்களில், விசேஷங்களில் ஏதாவது வித்தியாசமான அனுபவங்கள் கிடைத்திருக்குமே? என்று கேட்டபோது, "பெண் என்ற முறையில் அல்ல; வீடியோகிராபராக எனக்குக் கிடைத்த சில அனுபவங்கள் மிகப் புதுசு" என்றார். அப்படியென்ன அனுபவங்கள்? சிலவற்றைச் சொன்னார் :**

திடீரென்று ஒரு நாள், ஒரு நபர் என் வீட்டுக்கு வந்து, "உங்களுக்கு நன்றி சொல்லிவிட்டுப் போக வந்தேன்" என்று கூறியதோடு ஒரு கூடை பழங்களையும் ஹாலுக்குள் கொண்டு வந்து வைத்தபோது சந்தேகம் என்னைப் பின்னுக்கிழுத்தது. லேசான பயமும், பெண் என்ற பலவீனமும் தற்காப்பைத் தேடச் சொன்னது. அவரை நான் சந்தித்ததே இல்லை!

என் முகக் கலவரத்தைப் பார்த்த அவர், தான் ஒரு நிறுவனத்தில் பணியாற்றும் அதிகாரி என்றும், சமீபத்தில் நடந்து முடிந்த வருடாந்திர பங்குதாரர் கூட்டத்தில் நான் எடுத்த வீடியோ படத்தால் அவருடைய வேலை பிழைத்ததோடு, பதவி உயர்வும், ஊதிய ஏற்றமும் கிடைததாகச் சொன்னபோது நான் சந்தோஷமாக அதிர்ந்தேன்!

விஷயம் இதுதான்:

அந்த நிறுவனத்தின் வருடாந்திர கூட்டத்தை வீடியோ பதிவு செய்யும் பணி எனக்கு அளிக்கப்பட்டது. இந்த நிகழ்ச்சி என்றில்லாமல் பொதுவாகவே நான் பக்கவாட்டு விஷயங்களை (side lights) வீடியோவில் பதிவு செய்வதை வழக்கமாகக் கொண்டிருக்கிறேன். அந்த வகையில் பங்குதாரர்களை வரவேற்பது, அவர்களுக்கு சிற்றுண்டி வழங்குவது, அரங்குக்கு வெளியே கௌன்டர்களில் நிறுவன வாலன்டியர்கள் அன்புடன் உபசரித்து விவரங்கள் தருவது என்று பலதரப்பட்ட காட்சிகளைப் பதிவு செய்தேன். அப்போதுதான், என்னைத் தேடி வந்த அலுவலர் பொறுப்புடனும், விசுவாசத்துடனும் ஓடியாடி வேலை செய்ததையும், சக ஊழியர்களுடன் அவர்களுடைய பதவி நிலை என்ன என்று பார்க்காமல் பல பொறுப்புகளை மேற்கொண்டதையும் என் வீடியோ காமிரா விழுங்கியிருக்கிறது!

அந்த அதிகாரியைப் பற்றி அந்நிறுவனத் தலைவருக்கு, யாரோ விபரீதப் புகார்கள் தந்திருக்கிறார்களாம்! இவருடைய வேலைகளின் மதிப்பு சரியான கோணத்தில், சரியான முறையில் எடுத்துரைக்கப்படாமல் பழி போடும் உத்தியாக எதிர்மறையாகவே தெரிவிக்கப்பட்டிருக்கிறது!

சேர்மன் - ஒவ்வொரு ஊழியரையும் தனித் தனியே சந்தித்துப் பேசும் வாய்ப்பு இல்லாதவர். தனக்குக் கிடைத்த குறிப்புகளின் அடிப்படையில் அந்த அதிகாரியைப் பதவி நீக்கம் செய்யும் உத்தரவில் கையெழுத்துப் போடும் அளவுக்குத் தயாராகி விட்டார்.

ஆனால் நான் எடுத்துக் கொடுத்த வீடியோ படத்தை முழுமையாகப் பார்த்த சேர்மன், "அதோ ஓடியாடி வேலை செய்கிறாரே அவர் யார்? தாமே வலியச் சென்று சக ஊழியர்களுக்கு உதவுகிறாரே! இவரால் வரவேற்கப்பட்டு

உபசரிக்கப்படும் பங்குதாரர்கள் மன நிறைவுடன் அரங்கிற்குள் நுழைகிறார்களே! கூட்டத்தின் ஆரம்பத்தையே ஆரோக்கியமாகத் துவக்கும் இந்த ஆசாமி யார்?" என்று கேட்டிருக்கிறார்.

அவர்தான் தண்டிக்கப்பட இருக்கும் அதிகாரி என்று தெரிந்ததும், அவர் கண்களில் கனல் பறந்தது.

"தப்பான தகவல் கொடுத்து இந்த அதிகாரியைக் குறைத்து மதிப்பிட வைத்திருக்கிறார்கள். இந்த அப்பாவியும் எல்லா எதிர்ப்பையும், வேதனைகளையும் தாங்கிக் கொண்டு, பொறுமையாகத் தன் கடமையை அழகாகச் செய்து கொண்டிருக்கிறார்; கூப்பிடுங்கள் அவரை..."

அதிகாரி வந்ததும், தனக்குக் கிடைத்த பொய்த் தகவல்கள், அதற்கு நேர் மாறாக அவர் செயலாற்றும் திறனைக் காட்டிய வீடியோ படம் எல்லாவற்றையும் விளக்கி, அவருக்குப் பதவி உயர்வும், ஊதிய உயர்வும் அளித்துப் பாராட்டிப் பேசினார்.

"அது மட்டுமில்லை மேடம்; இப்போ என்னை அவர் ஆபீஸில் சந்தித்தாரானால், என் பெயர் சொல்லிக் கூப்பிட்டுப் பேசுமளவுக்கு எனக்கு முக்கியத்துவம் தருகிறார்" என்று அவர் கண்களில் நீர்மல்கக் குறிப்பிட்டபோது, நான் நெகிழ்ந்து போனேன்.

இன்னொரு சம்பவம் -

தளர்ந்த உடலுடன், சோகம் கனக்கும் மனத்தை சுமக்க முடியாமல் சோர்வுடன் வந்த பெரியவர், எனக்கு அறிமுகமானவர். அவருடைய மகள் திருமணத்தை நான் வீடியோ படம் எடுத்திருக்கிறேன்.

"நீங்கள் எடுத்த வீடியோ படத்தின் ஒரு பிரதி வேண்டும், அம்மா," என்ற அவருடைய குரல் உடைந்தது. அதனால் கண் மதகு திறந்தது.

அவரை ஆசுவாசப்படுத்தி உட்கார வைத்தேன். "கூடுதல் செலவுக்காகப் பதறுகிறீர்களா?" என்று கேட்டேன்.

"கூடுதல் செலவா? நான் நடத்தி வைத்த திருமணச் செலவுக்கே அர்த்தமில்லாமல் போய் விடும் போலிருக்கிறது அம்மா. என் மகளும் மாப்பிள்ளையும் விவாகரத்து செய்து கொள்ளப் போகிறார்கள். இவர்களுடைய வழக்கை விசாரிக்கும் நீதிபதிக்குப் போட்டுக் காட்டத்தான் உங்களிடம் ஒரு பிரதி கேட்கிறேன்" என்ற அவர் விளக்கம் என்னை பலமாகத் தாக்கியது.

அடுத்த நாளே பிரதி எடுத்துக் கொடுத்தேன்.

ஒரே வாரத்தில் அந்தப் பெரியவர் மீண்டும் வந்தார். இப்போது அவர் தோற்றமே மாறியிருந்தது. புது உற்சாகம், குதூகலம், தளர் நடை போய் துளிர்த்த புது நடை....

"அம்மா, என் திருமணச் செலவு, மன உளைச்சல், முயற்சிகள் எதுவும் வீண் போகவில்லை. நீங்கள் எடுத்துக் கொடுத்த வீடியோ படம், என் பெண்ணையும் மாப்பிள்ளையையும் மீண்டும் ஒன்று சேர்த்து விட்டது." அவர் குரல், அவருக்குப் பத்து வயது குறைந்து விட்ட உற்சாகத்தைச் சொன்னது.

எப்படியாம்?

விவாகரத்து கோரிய கணவன் மனைவி இருவரையும் அமர வைத்து அவர்களோடு தானும் அவர்களுடைய திருமண வீடியோ படத்தைப் பார்த்தார் நீதிபதி. பெண் வீட்டார் சத்திரத்தில் வந்து இறங்குவது முதல், மூன்றாம் நாள் முற்பகல் கட்டு சாதக் கூடையுடன் வெளியேறுவது வரையிலான எல்லா நிகழ்ச்சிகளையும் வீடியோ வண்ணமயமாய்க் காட்டியது!

பெண்ணின் அப்பாவுடைய பதற்றம் தோய்ந்த முகம்; மிகப் பெரிய பொறுப்பை நிறைவேற்றப் போகும் படபடப்பு, சகோதரர்களின் பரபரப்பு, தன் பெண்ணிற்கு வாழ்க்கையின் முழுமையை அளிக்கப் போகும் நெகிழ்ச்சியில் அம்மா... குவிக்கப்பட்டிருக்கும் காய்கறிகள், தம் சுவையான சமையலால் அந்தத் திருமணம் மேலும் சிறப்புப் பெற வேண்டும் என்ற ஆர்வத்தில் வியர்வை வழிய, அனலில் வேலை செய்யும் சமையல் கலைஞர்கள், அதற்கு முன்னால் தரையில் அழகுடன் இடப்பட்ட கோலம், பிறகான பூ வேலைப்பாடுகள்... உறவினர்களின் மகிழ்ச்சி.. அந்தத் திருமணத்தால் வேலை மேற்கொண்டு ஊதியம் பெற்ற பெட்ரோமாக்ஸ் விளக்கு தூக்குபவரிலிருந்து அனைத்துத் தரப்பாரும் முகத்தில் சந்தோஷத்துடன்...

அந்த முழுப் படத்தையும் பார்த்த நீதிபதி, விவாகரத்து கோரி நிற்கும் தம்பதிகளைப் பார்த்தார். "இந்தத் திருமணத்தில் எவ்வளவு ஈடுபாட்டுடன், எவ்வளவு உடல் உழைப்புடன், எவ்வளவு மன வலியுடன், எவ்வளவு செலவுடன் எல்லோரும் ஈடுபட்டிருக்கிறார்கள்! இத்தனை பிரயத்தனங்களும் எதற்காக? திருமணம் முடிந்த ஒரு சில மாதங்களுக்குள்ளேயே பிரிவதற்காகவா? திருமணம் என்ற வைபவத்தின் அர்த்தம் என்ன? உங்கள் இருவரைத் தவிர மற்ற எல்லோருடைய முயற்சி, உழைப்பு எல்லாம் வீணாக வேண்டுமா? பேசித் தீர்த்துக் கொள்ளக் கூடிய, இரண்டே இரண்டு மனங்களின் கருத்து ஒற்றுமையை சுலபமாக ஏற்படுத்திக் கொள்ளக் கூடிய சந்தர்ப்பங்களை ஏன் வீம்புக்காக மறுக்கிறீர்கள்? உங்கள் இருவர் நல்வாழ்க்கைக்காக எத்தனையோ விஷயங்களை அனுசரித்துக் கொண்டு போகும் உங்கள் பெற்றோர்களை இந்த வீடியோவில் பாருங்கள்; யோசியுங்கள்..." என்று அந்தத் தம்பதியினரிடம் கேட்டுக் கொண்டார்.

முறிந்த மண வாழ்க்கை அன்று இணைந்து; துளிர்த்தது!

சந்திப்பு : **பிரபுசங்கர்**



# ஆஹா என்ன பொருத்தம்!

தமாஷ் படங்களுக்கு மார்க்கெட் இருப்பதை உணர்ந்து, சினிமா சிக்கல்கள் தீர்ந்து, நிறையப் படங்கள் வரத் தொடங்கும் முன் முந்திக்கொள்ள முனைந்து, படு அவசரத்தில் வந்திருக்கும் படம்.

அவசரம், ஒவ்வொரு அங்குலத்திலும் தெரிகிறது.

பணக்கார ஜமீந்தாரின் போலி வாரிசாக வந்து, அவர் மகளையே லவ்வடித்து, மணக்கிற வெகு சாதாரணக் கதை. ஆனால் கவுண்டமணியைக் கேடயமாக வைத்துக் கொண்டு, டைரக்டர் கோதாவில் இறங்கியிருப்பதால் கொஞ்சம் ரசிக்க முடிகிறது.

இன்னொரு கேடயமாக அவர் நினைத்திருப்பது சங்க (வர்ச்சி)வி. இதற்குமேல் எதுவும் இல்லை என்கிறார் அம்மணி. ஆடைகளும் அசைவுகளும் அதிர்ச்சி தருபவை. ரசிகர்களைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்.

இன்னொரு விஷயம், நகைச்சுவை என்றால் என்னவும் செய்யலாம் என்று டைரக்டர் நினைத்துவிட்டார் போலும். ஜமீந்தாரின் மனைவி கவுண்டமணியுடன் ஆடும் ஆட்டம், சங்கவி தன் தோழிகளுடன் டின் பீர் அடித்துவிட்டு உளறுவது எல்லாம் அன்சகிக்கபிள்.

மைக்கேல் ஜாக்ஸன் கெட்டப்பில் சோக சுந்தரராக வரும் செந்திலுக்கு கொஞ்சம் வித்தியாசமான வேஷம். ஜமீந்தாரின் நிஜ வாரிசான அவரை நெருங்க விடாமல் ராம்கி - கவுண்டமணி இருவரும் போடுகிற தடைகள் சுவாரஸ்யம். உச்சகட்டமாக சிவ-பார்வதி வேஷத்தில் டார்லிங் என்றெல்லாம் பேசிக் கொண்டு அடிக்கிற கூத்தில் கொஞ்சம் சிரிப்பு வருகிறது.

ஆனால், கண்ணியமான நகைச்சுவைக்கு எச்சச்சக்க வாய்ப்பிருந்தும் பயன்படுத்திக் கொள்ளாமல், நீள நீளக் காட்சிகளை ஜவ்வடிக்க விட்டிருக்கிறார்கள்.

வித்யாசாகரின் இசையில், பழைய சூப்பர் ஹிட் பாடல்களின் வாசனை இருந்தாலும் நாலு பாடல்கள் எப்படியும் தேறிவிடுகின்றன. கோயமுத்தூர் மாப்ளேயிலிருந்து பாடல் காட்சிகளுக்கு ஒரே லொக்கேஷன், ஒரே மாதிரி டான்ஸ் என்று தொடர்ந்து கொடுத்து வருகிறார் ரங்கநாதன். மகா அலுப்பு.

பிரசித்தி பெற்ற தமிழ்சினிமாவின் சில பொதுவான குணாதிசயங்களையே (18 பட்டி பஞ்சாயத்து, கிராமத்துக்கு வரும் நகரத்து ஹீரோயின் இன்னபிற) கிண்டலடித்து காட்சிகளை அமைத்திருக்கும் துணிச்சலைப் பாராட்ட வேண்டும். ஆனால், எதைச் சொல்லவருகிறோம் என்றே புரியாத விதமாக எங்கெங்கோ இழுத்து, எப்படியெல்லாமோ வளைத்து, நெளித்து, நெளிய வைத்து விட்டிருக்கிறதை மட்டும் மன்னிக்க முடியவில்லை.

'ஐயோ, என்ன அறுவை' என்று அலற வைத்துவிட்டார்கள், கடைசியில்.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621
Annual Subscription : India Rs. 208/-; Overseas Rs. 1200/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 104/-; Overseas Rs. 600/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392/97* Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/(S) 161 * Registered as a Newspaper in Srilanka